குமரன்

ஆரம் 18, முத்து 33

April 03, 1941

Record no. 313

*Kuma<u>r</u>a<u>n</u>*

*Āram 18, muttu 33*

*April 03, 1941*

Record no. 313

REGD. NO. M. 1823. 12 பக்கங்கள். KUMARAN WEEKLY.

# குமரன்

சந்தா விவரம்
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஞூ 1-க்கு ரூ. 7-0-0

விளம்பரம்.
கோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கு எழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் | மாதப் பதிப்பும் சேர்ந்தது | PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 18. | காரைக்குடி, விக்கிரம-ஞூ பங்குனி-மீ 21-உ (3—4—41) | முத்து 33

## பிரஞ்சு இலக்கியக் கழகங்கள்

இன்று நாகரிகமடைந்த ஒவ்வொரு நாட்டிலும், நாட்டு மொழியையும் கலைகளையும் வளர்ப்பதற்கும், காலப் போக்குக்கு ஏற்றபடி சீர்திருத்தஞ் செய்து அவைகளுக்குப் புத்துயிரளிப்பதற்கும் தனிச் சங்கங்கள் இருக்கின்றன. மேலும் இலக்கிய அபிவிருத்தியையும் எழுத்தாளர்களின் நலவுரிமைகளைப் பாதுகாப்பதையும் நோக்கமாகக்கொண்ட பல சங்கங்களுமிருக்கின்றன. இவைகளிற் சில, பல்கலைகளின் விருத்திக்காக வருடந்தோறும் ஆயிரக் கணக்கான ரூபாய்களைப் புதிய எழுத்தாளர்களுக்குப் பரிசாக வழங்கி, அவர்களையும் அவர்களது நூல்களையும் பொது மக்களுக்கு அறிமுகஞ் செய்கின்றன. உதாரணமாக ஒவ்வொரு வருடமும் அவ்வருடத்தில் எழுதி வெளியிடப்பட்டவைகளுள் மிகச் சிறந்ததெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட நாவலுக்கோ, கவிதைத் தொகுதிக்கோ, வசன இலக்கியத்திற்கோ, விமர்சன நூலுக்கோ பரிசுக் கழகத்தார் பரிசு வழங்குகின்றனர். வருடந்தோறும் வெளிவரும் பல்லாயிரக் கணக்கான நூல்களில் எதைப் பொறுக்கிப் படிப்பது எனத் திகைக்கும் பொது மக்களுக்கு இவ்வண்ணம் பரிசுபெற்ற நூல்கள் சிபார்சு செய்யப்படுவனபோன்று விளங்குகின்றன.

நாம் அறிந்த வரையில், இத்தகைய சங்கங்கள் பிரான்சு தேயத்தில் மிகச் சிறப்புடன் வேலை செய்து வருகின்றன. அந்நாட்டின் மொழி வளர்ச்சிக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் பல ஆண்டுகளாக உழைத்துவரும் பிரெஞ்சு அகாடெமி, இவைகளுள் மிகப் புராதனமானதும் பெயர் வாய்ந்ததுமாகும். இச்சங்கத்தை நமது புராதனத் தமிழ்ச் சங்கத்திற்கு ஒப்பிடலாம். இதன் வரலாற்றைச் சிறிது கூறுவோம்.

பாரிஸ் நகரில் 1629 முதல் ஒன்பது கலா ரசிகர்கள் கோன்ரார் என்பவரின் மாளிகையில் வாரம் ஒரு முறை கூடி பொதுவாக நாட்டு வனப்பத்தையும் சிறப்பாக இலக்கியத்தையும் அழகுக் கலைகளையும்பற்றி உரையாடி வந்தனர். தங்களில் எவரேனும் ஒரு நூல் இயற்றினல் அது அக்கூட்டத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டு பின்னர் அவர்கள் தங்கள் தங்கள் அபிப்பிராயத்தைக் கூறுவர். இவ்வண்ணமாக மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் நடைபெற்று வந்தது.

அக்காலத்தில் பிரான்சில் கார்டினல் ரிஷ்லியோ என்னும் பிரதம மந்திரி அரசாட்சி முறையைச் சீர்படுத்தியும் நாட்டை ஒரே ஆதிக்கத்தின் கீழ் ஒற்றுமைப் படுத்தியும் வந்தார். பொதுநல வாழ்விற்குரிய எல்லா விஷயங்களையும் அரசாங்கத்தின் மேற்பார்வைக் குட்படுத்த வேண்டும் என்பது அவரது கருத்தாக இருந்தது. கோன்ரார் மாளிகையில் சில கலா ரசிகர்கள் கூடி வந்தது அவர் காதுக்கு எட்டவே, அதையும் தமது ஆதிக்கத்திற்குள் கொண்டு வந்து அதற்குச் சட்டப்படி ஒரு பொது அந்தஸ்தையும் அரசாங்கப் பாதுகாப்பையும் அளிக்க விரும்பினர். அவர் விருப்பப்படியே அது 1634-ல் 'பிரஞ்சு அகாடெமி' (இலக்கியக் கழகம்) என்னும் பெயர் பூண்டு ஒழுங்காக

## தமிழ்த் தென்றல்

"வில்லன்"

★

அமைக்கப்பட்ட ஓர் கழகமாக மாறியது. 1635-ல் மன்னர் பிரான் அதற்கு உரிமைப் பத்திரங்கள் வழங்கினர். சில ஆண்டுகளுக்குப் பின், அது கூடுவதற்கென ஒரு தனி மாளிகையும் அளிக்கப்பட்டது. பிரெஞ்சுப் புரட்சி நடைபெற்றபோது இதன் தொடர்ச்சியான வாழ்வுக்குப் பல நெருக்கடிகள் ஏற்பட்டன. ஆயினும், இவற்றையெல்லாம் சமாளித்துக் கொண்டு இது பிரெஞ்சுப் பொது வாழ்வில் ஒரு கண்ணியமான இடம்பெற்றுப் பொலிந்து வருகின்றது.

இக்கழகத்தில் நாற்பது அங்கத்தினர்களே உண்டு. டைரெக்டர் எனப்படும் தலைவரும், சான்செலர் எனப்படும் கழக முத்திரைகளின் காப்பாளரும், நிரந்தரக் காரியதரிசியும் முக்கியமான நிருவாகிகள் ஆவர். காலியாகும் ஸ்தானத்திற்கு அங்கத்தினர்களே அபேட்சகர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுப்பர். கழகத்தின் விசேஷக் கூட்டத்தில் ஒரு பழைய அங்கத்தினர் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினரை வரவேற்று அவரது வாழ்க்கையையும் இலக்கியத்திற்குச் செய்துள்ள சேவையையும் பற்றிப் புகழ்ந்து பேசுவார். புதிய அங்கத்தினர் தமது ஸ்தானத்தில் முன்பு இருந்தவரின் அருமை பெருமைகளைக் கூறித் தக்கபடி பதிலளிப்பார். அங்கத்தினர்கள் பச்சையுடையணிந்து கூட்டத்தில் அமர்வதும் பேசுவதும் வெகு ஆடம்பரமாக இருக்கும். இக்கழகத்தின் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்படுவது ஒரு பெரிய கௌரவமாகும். இதன் நாற்பது அங்கத்தினர்களும் 'அமரர்கள்' என்றழைக்கப்படுவர்.

கழகத்திலுள்ள அனைவருமே பிரபல எழுத்தாளர்களாகவோ இலக்கியச் சிருட்டி கர்த்தர்களாகவோ இரார். கவிகள், நாடக நூலாசிரியர்கள், நாவலாசிரியர்கள், சரித்திர ஆசிரியர்கள் முதலிய ஆசிரியர்களைப் போலவே பிரபல வக்கீல்மார்கள், ராஜதந்திர நிபுணர்கள், சேனாதிபதிகள், குருக்கள் மார்கள், வைத்தியர்கள், இன்னும் வாழ்க்கையின் பல துறைகளிலும் சிறப்புற்றவர்களும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவர்கள் அனைவருமே மொழியின் மேன்மையையும் சம்பிரதாயங்களையும் பாதுகாப்பதில் ஊக்கங்காட்டுகின்றனர்.

மொழியைத் தூய்மைப் படுத்துவதும் அதை அவ்வப்போது காலத்திற்கேற்றவாறு செம்மைப் படுத்துவதும் நிர்ணயமான விதிகளுக்குள் கொண்டுவருவதும் வளர்ந்து வரும் கலைகள் விஞ்ஞான சாத்திரங்கள் ஆகியவற்றின் கருத்துக்களை வெளிப்படுத்துதற்குரிய கருவியாக அதை ஆக்குவதும் இதன் பிரதான வேலைகளாக இருந்து வருகின்றன. இந் நாட்டில் வழங்கின சொற்களையெல்லாம் தொகுத்து 1694-ல் கழக அகராதியொன்றை வெளியிட்டது. இதுவரையில் அதற்குத் திருத்தமான ஆறு பதிப்புகள் வந்துள்ளன. சமீபத்தில் கழக இலக்கணமொன்றும் வெளியிட்டுள்ளது. இக்கழகத்தின் ஆதரவில் வருடா வருடம் இலக்கியம், கவிதை, வசனம் முதலிய பகுதிகளில் அவ்வவ்வருடத்தில் வெளியான நூல்களில் சிறந்ததென அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நூல்களுக்குப் பரிசுகள் அளிக்கப்படுகின்றன.

இக்கழகமே பிரெஞ்சு மொழியையும் இலக்கிய வழக்காறுகளையும் பாதுகாத்தும், மொழிக்கு ஒரு கௌரவமளித்தும் வருகின்றது. பிரெஞ்சு அரசாங்கம் மொழிக்கும் இலக்கியத்திற்கும் அளிக்கும் மதிப்புக்கு இது ஓர் அத்தாட்சியாக விளங்குகிறது. பிரெஞ்சு மேதையின் பிரதிநிதிகளாயுள்ளவர்கள் இதில் அங்கம் வகிப்பதால் பிரெஞ்சு நாட்டில் மட்டுமன்றி இதர நாடுகளிலும் இதற்குப் பெரு மதிப்புண்டு.

பிரெஞ்சு அகாடெமிக்கு அடுத்தபடியாக விளங்குவது கோன்கூர் அகாடெமீ என்பது. இக்கழகம் கோன்கூர் சகோதரர்களால் 1896-ல் அமைக்கப்பட்டு, 1903-ல் பொதுஜன அங்கீகாரம் பெற்றது. தங்களது ஆயுளையும் செல்வத்தையும் கலாபிவிருத்திக்கென்றே அர்ப்பணஞ் செய்த கோன்கூர் சகோதரர்கள் தங்களது உடைமைகளையெல்லாம் இக்கழகத்திற்கே எழுதிவைத்துச் சென்றனர். இக்கழகத்தில் பத்துப் பிரபல எழுத்தாளர்கள் அங்கத்தினர்களாக இருக்கின்றனர். ஒவ்வொரு அங்கத்தினருக்கும் வருடமொன்றுக்கு 6000 பிராங்குகள் (சற்றேறக்குறைய ரூ 600) உதவிப் பணமாக அளிக்கப்படுகின்றன. இப் பத்து அங்கத்தினர்களும் சேர்ந்து ஒவ்வொரு வருடமும் அவ்வருடத்தில் வெளியான கற்பனை இலக்கிய நூல்களில் ஒன்றைப் பொறுக்கி யெடுத்து அதன் ஆசிரியருக்கு 5000 பிராங்குகள் பரிசளிக்கின்றனர். பிரெஞ்சு தேசிய வாழ்வில் பிரெஞ்சு அகாடெமிக்கு அடுத்தாற்போல் இக்கழகத்திற்கு ஒரு கௌரவமான இடமுண்டு.

பிரான்சில் இவைகளைப் போன்று பல கழகங்களும் பரிசளிக்கும் ஸ்தாபனங்களும் உண்டு. இவையெல்லாம் நாட்டின் கலைஞானங்களைப் பாதுகாத்தும் பெருக்கியும் வருகின்றன.

தமிழ் மொழியை வளர்ப்பதற்கு நமது தமிழ் நாட்டில் இத்தகைய கழகங்கள் ஏற்படவேண்டும். அதிருஷ்ட வசமாக நம்மிடையே தமிழ் இலக்கிய மகாநாடு ஒன்று முதன் முதலாக ஏற்பட்டுள்ளது. அதுவே இப்பணியை முதன் முதலாக மேற்கொள்ளுதல் நலம். ஒரு கற்பனையைச் செவ்வனே ஆரம்பித்து வைப்பதில் தான் சிரமம் இருக்கின்றது. ஒரு கழகம் நன்கமைக்கப்பெற்று ஆரம்பமாகிவிட்டால் அது சில வருடங்களில் பிரபலமாகி விடுவதுடன் தேவைக்கேற்ப இன்னும் பல கழகங்களும் ஆங்காங்கு ஏற்பட்டுவிடுமென்பதில் ஐயமில்லை.

ஆதலின், தமிழர்காள் எழுமின்! தமிழ்ச் செல்வர்காள் கோன்கூர் சகோதரர்களைப் போலக் கழகம் காண்மின்!

---

ஊக்க மிருந்தால் தான் உயர்ந்த செயல்களைச் செய்யக் கூடும். 'தீபியன்'

## சென்னை ரேடியோ

ஒலி பரப்புகள் :— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-30 முதல் 3 வரை; மாலை 4 முதல் இரவு 10-30 வரை.

தமிழில் செய்திகள் :— காலை 7-45; பிற்பகல் 2-45; இரவு 7-35.

### ஏப்ரல் 3உ வியாழன்

1·35—2·00 அந்தகூரி யக்ஞ நாராயண சாஸ்திரி வயலின்
5·00—6·00 நாதமுனி கோஷ்டியார்
6·05—6·30, 9·30—10·00 எம். என். ஹரிஹரன் பாட்டு
7·50—9·15 பெங்களூர் ஸ்ரீமதி நாகரத்னம்மாள் ஷை

★

### 4உ வெள்ளி

2·00—2·15 கலியாண ஊர்வலம்—ஒரு நிகழ்ச்சி
5·00—5·45, 8·45—9·15 ஈரோடு விசுவநாத ஐயர் வயலின்
6·05—6·30 வி. ஜே. வர்மா புல்லாங்குழல்
6·30—7·00, 7·50—8·30 ஸ்ரீமதி எஸ். பி. ஹம்ஸ தமயந்தி பாட்டு

★

### 5உ சனி

5·00—5·45, 6·30—7·00 ஸ்ரீமதி டி. ஆர். ராஜகுமாரி பாட்டு
5·45—6·00 ராமாயணக் கும்மி
6·05—6·30 ஜி. என். தண்டபாணி பாட்டு
7·50—9·00 பாலக்காடு ராம பாகவதர் ஷை

★

### 6உ ஞாயிறு

1·35—2·00, 4·00—4·30 ஈ. ஆர். தேசிகன் பாட்டு
2·00—2·30, 5·00—5·45 கே. பி. சிவானந்தம் வீணை
7·50—9·00 திருச்சியில் உள்ளபடி
9·30—10·00 அருணாசலக் கவியின் ராம நாடகக் கீர்த்தனைகள்

★

### 7உ திங்கள்

1·35—2·00 எம். ராஜா ராவ் பாட்டு
5·00—5·45, 8·30—9·00 பி. கே. விசுவநாத சர்மா வயலின்
6·05—6·30, 9·45—10·30 வி. எஸ். வேதாந்தம் ஐயங்கார் பாட்டு
6·30—7·00, 7·50—8·30 ஸ்ரீமதி மீனாக்ஷி ராமகிருஷ்ணன் ஷை
7·00—7·15 உலகம் பலவிதம் — யாத்திரை— வ. ரா. தயாரித்தது

★

### 8உ செவ்வாய்

1·35—2·00 ஸ்ரீமதி ஆண்டாளம்மாள் பாட்டு
2·00—2·30 பிசாசு சங்கீதம்—வி. பரஞ்சோதி எழுதியது
5·00—5·45, 9·30—10·00 டி. ராமகிருஷ்ண சாஸ்திரி பாட்டு
6·05—6·30 பி. சுப்ரமண்ய ஐயர் புல்லாங்குழல்
6·30—7·00 நிலவுக் கோயில்—நாடகம்
7·50—9·00 சர்மா சகோதரர்கள் வீணை, வயலின்

★

### 9உ புதன்

1·35—2·00 ஸ்ரீமதி ஜயலக்ஷ்மி வீணை
5·00—6·00, 7·50—8·30 திருவீழிமிழலை சகோதரர்கள் நாதசுரம்
6·30—7·00, 8·30—9·00 ஸ்ரீமதி தர்மாம்பாள் பாட்டு
9·30—10·30 இயற்பகை நாயனார்—திருவாரூர் நடேசய்யர் சங்கீத உபந்யாசம்

★

### 10உ வியாழன்

1·35—2·00 வி. எஸ். பாலசுப்ரமண்ய ஐயர் வயலின்
5·00—5·45, 7·50—8·30 மருத்துவகுடி ராஜகோபாலய்யர் பாட்டு
6·05—6·30, 6·45—7·00 எஸ். எஸ். டி. மொஹிதீன் ரஸ்வி—நாத்கள்
8·50—9·15, 9·30—10·30 ஸ்ரீமதிகள் கல்பகமும் கமலாவும் பாட்டு

## விசித்திரப் பத்திரிகைகள்

### நூற்றாண்டுக் கொரு இதழ்!

பாரிசில் முன் பல விசித்திரப் பத்திரிகைகள் வெளியிடப்பட்டு வந்தன. சில வருடங்கட்கு முன் ஒரு பத்திரிகை ரப்பரில் அச்சிடப்பட்டு வெளி வந்தது. அதை குளிக்கும்போதும் படிக்கலாம். இன்னொன்று தண்ணீரில் நனையாத காகிதத்தில் அச்சிடப்பட்டது. கடல் ஸ்நானம் செய்வோருக்காக அது வெளியிடப்பட்டது. பாட்டுப் பத்திரிகையாகவே வெளி வந்ததும் பாரிஸில்தான். செய்திகள் எல்லாம் கவி ரூபத்தில் வெளிவந்தன. பதினைந்து வருடகாலம் அது நிலவிற்று. அவ்வளவு காலத்திலும் மொத்தம் 3,25,000 செய்திப் பாட்டுகள் வெளிவந்தன.

பாரிஸிலிருந்து 'கைக்குட்டை' யென்ற பெயருடன் மற்றொரு பத்திரிகை வெளியிடப்பட்டது. அதைப் படித்து விட்டுக் கைக் குட்டையாக உபயோகிக்கலாம்.

இங்கிலாந்திலும் பத்திரிகை உலகில் சில அசாதாரண சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன. 'பீயர்ஸன்ஸ் வீக்லி' இன்புளுவன்ஸா அதிகமாக நடமாடிய காலத்தில் ஒரு சமயம் யூக்கலிப்டஸ் எண்ணெய் தோய்க்கப்பட்ட காகிதத்தில் அச்சிடப்பட்டது. 'இரீனக் கியூஸ் கிளவுட்' என்ற பத்திரிகை சென்ற நூற்றாண்டின் மத்தியில் பிரசுரிக்கப்பட்டு வந்தது. அது துணியின் மீதே அச்சிடப்பட்டது. இது வாசகர்களின் சௌகரியத்துக்காக அவ்வாறு பிரசுரிக்கப்படவில்லை; ஆனால் அக்காலத்தில் செய்தித் தாள்களுக்கு சுமத்தப்பட்ட வரியினின்றும் தப்பவே இம்மாதிரி 'செய்தித் துணி' யாக வெளியிடப்பட்டது.

இங்கிலாந்தில் மிட்லாந்து தினசரிப் பத்திரிகை ஆசிரியர் சென்ற நூற்றாண்டில் ஒரு நூதன முறையைக் கைக்கொண்டார். ஒரு படகுப் போட்டி நடைபெற்றது. எந்த வர்ணமுடைய படகுக் கட்சி ஜயிக்கிறதோ அந்த நிறத்தில் வெற்றிச் செய்தியைப் பிரசுரிப்பதென்று அவர் தீர்மானித்தார். எதிர் பாராத விதமாக அந்தப்போட்டி மிக உக்கிரமாயிருந்தது. அதற்குப்பின் அந்த முறை கையாளப்படவேயில்லை.

'வியாழக்கிழமைத் தீவு' என்ற தீவில் ஓர் சமயம் பிரசுரமான 'டெய்லி பைலட்' என்ற பத்திரிகைதான் உலகிலேயே மிகச் சிறிய பத்திரிகையாக இருந்தது. ஒரு அடி நீளமும் அரை அடி அகலமுமுள்ள ஒரு துண்டுக் காகிதத்தின் ஒரு பக்கம் மட்டுமே அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது. பெரும்பாலும் கப்பல் போக்கு வரத்துச் செய்திகள்தாம். இப்போதிருக்கும் பத்திரிகைகளில் பஹாமாத் தீவுகளில் ஒன்றான பிமினித் தீவில் வெளி 'பிமினி பியூகிள்' என்ற பத்திரிகைதான் உலகிலேயே மிகச் சிறியது. சுமார் மூன்றங்குல அகலமும், நாலரை அங்குல நீளமும் உடையது. மிகப் பெரிய பத்திரிகை 1859ல் நியூயார்க்கில் வெளியாயிற்று. நாற்பது பேர் இரண்டு மாதம் வேலை செய்து அதை வெளியிட்டனர். எட்டரை அடி நீளமும், ஆறடி அகலமும் உடையது. பக்கத்துக்குப் பதின்மூன்று பத்திகள் வீதம் கொண்டது. அதன் இரண்டாவது இதழ் இன்னும் வெளியாகவில்லை; ஏனெனில் நூற்றாண்டுக்கு ஒரு இதழ் வீதமே அது வெளியிடப்படுமாம்!

## சமூக ஊழியத்தில் மாதர்கள் கடமை

### பீகம் அமீருதீன் பிரசங்கம்

சென்னை இந்திய மாதர் சங்கத்தின் 23-வது வருடக்கொண்டாட்டம் சமீபத்தில் மைலாப்பூரில் பீகம் அமீருதீன் தலைமையில் நடைபெற்றது. "சட்ட சபைகளிலோ, ஸ்தல ஸ்தாபனங்களிலோ பெண்கள் ஸ்தானம் பெற்றுவிட்டால், அங்கே அவர்கள் அதிக சிரத்தையுடன் உழைக்கவேண்டும். சட்டசபைகளில் அதிகப்படியானவர்களாயிருக்கும் ஆடவர்களது ஒத்துழைப்பையும் பெறவேண்டும். பெண்களுடைய நிலைமையை அபிவிருத்தி செய்வதற்கான சீர்திருத்தச் சட்டங்கள் விஷயத்தில் இதைப் பயன்படுத்தவேண்டும். தாங்களுக்குக் கிடைத்துள்ள புதிய உரிமைகள் மூலம் தங்களுக்கு ஏற்படும் கடமைகளையும் பெண்கள் உணரவேண்டும். கூட்டங்களுக்கும், சபைகளுக்கும் அவர்கள் அலங்காரமாக மட்டும் இராமல் அவற்றில் சிரத்தையுடன் உழைப்பவர்களாயும் இருத்தல்வேண்டும். பல திறப்பட்ட சமூக ஊழியத்திலும், கற்ற, பயிற்சி பெற்ற பெண்கள் தேவைப்படுகின்றனர். ஏதோ அபிமானங்கொண்டு அவர்கள் அதில் பங்கெடுத்துக் கொள்பவராயிராமல், உண்மையிலேயே சிரத்தைகொண்டு ஊழியம் புரிபவர்களாக இருக்கவேண்டும். பெண்கள் நலத்துக்காக உழைக்க ஒரு பத்திரிகையும் தேவை" யென்று பீகம் அமீருதீன் தமது தலைமை உரையில் குறிப்பிட்டார்.

இந்துச் சட்டத் திருத்த சம்பந்தமாக சர்க்கார் ஏற்படுத்தியிருக்கும் விசாரணையில், இந்து மாதர் வார்சுரிமை, வார்சு பாத்தியதை உரிமை, தத்தெடுத்தல் முதலியன பற்றியும், கல்யாணச் சட்டத்திருத்தம் பற்றியும் உள்ள விஷயங்களைச் சேர்த்துக் கொள்ளுமாறும், விசாரணைக் கமிட்டியில் பெண்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்றும் கூட்டத்தில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அடுத்த வருஷத்துக்கு டாக்டர் ஸ்ரீமதி முத்துலட்சுமி ரெட்டி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## திருச்சி ரேடியோ

ஒலி பரப்புகள் :— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-30 முதல் 3 வரை; மாலை 5 முதல் இரவு 10 வரை.

தமிழில் செய்திகள் :— காலை 7-45; பிற்பகல் 2-45; இரவு 7-35.

### ஏப்ரல் 3உ வியாழன்

2·00—2·30 டி. வி. சிவசிதம்பர ஐயர் புல்லாங்குழல்
5·00—5·45, 7·50—9·00 சென்னையிலுள்ளபடி
9·00—9·20 சைத்தி—நாடகம்

★

### 4உ வெள்ளி

2·00—2·30, 5·15—6·00 எஸ். ஆர். குப்புசாமி பாட்டு
6·05—6·30, 7·50—8·30 ஸ்ரீமதி நீலம்மா கடம்பி வீணை, பாட்டு

★

### 5உ சனி

1·35—2·00 பதி ஆலோசனை—நாடகம்
2·00—2·30, 8·45—9·20 டி. புட்டுஸ்வாமையா பாட்டு
5·15—6·00, 7·50—8·30 இலுப்பூர் நடேசம் பிள்ளை நாதசுரம்
7·00—7·30 சதி ஆலோசனை—நாடகம்

★

### 6உ ஞாயிறு

2·00—2·30 டி. என். கிருஷ்ணன் வயலின்
5·00—6·00 ராம நாடகம்—பட்டாபிஷேகம், ராமஜனனம்
6·05—6·30 கே. ஆர். வி. ராமநாத சாஸ்திரி பாட்டு
7·00—7·15 கம்ப ராமாயண வாசகம் —கே. அருணாசலக் கவுண்டர்
7·15—7·30 லவ, குச நாடகம்
7·50—9·20 பல்லடம் சஞ்சீவி ராவ் புல்லாங்குழல், டி. குருராஜப்பா வயலின், உமையாள்புரம் கணேசய்யர் மிருதங்கம்

★

### 7உ திங்கள்

2·00—2·30, 8·30—9·20 பறவூர் ஸ்ரீமதி வி. பொன்னம்மாள் பாட்டு
5·15—6·00, 7·50—8·30 ஸ்ரீமதி காமு அம்மாள் வீணை
7·00—7·15 தமிழ் இலக்கியம்—இடைக் காலம்—ரா. பி. சேதுப் பிள்ளை பேச்சு.

★

### 8உ செவ்வாய்

2·00—2·30 வி. பி. லக்ஷ்மிநாராயண மேனன் பாட்டு
5·15—6·00 எஸ். டி. ராஜப்பா, குமாரி பட்டம்மா ஷை
7·00—7·30 தானவாத்தியக் கச்சேரி
7·50—9·00 சென்னையிலுள்ளபடி
9·00—9·15 கற்பனை ஊர்—நாடகம்

★

### 9உ புதன்

2·00—2·30 குமாரி எஸ். ராஜலக்ஷ்மி பாட்டு
4·00—5·00 கம்பர் திருவிழா
5·15—6·00, 7·50—8·30 கே. எஸ். ஜயலக்ஷ்மி புல்லாங்குழல்
8·30—9·20 பார்வதி கல்யாணம்— எஸ். ஹரிஹர பாகவதர் சங்கீத உபந்யாசம்

★

### 10உ வியாழன்

2·00—2·30 குமாரி காமாக்ஷி, குமாரி விஜயலக்ஷ்மி, நாராயண ஐயர் பாட்டு
4·00—5·00 கம்பர் திருவிழா
5·15—6·00, 7·50—8·30 வி. ஆர். மணி ஐயர் வயலின்
6·05—6·30, 8·40—9·20 பி. எஸ். ராஜா ஐயங்கார் பாட்டு
7·15—7·30 முஹமது நபியும், அவர் உபதேசமும்—கான்பகதூர் பி. கலீபுல்லா சாகிப் பகதூர் பேச்சு

## நடப்புவட்டி விகிதங்கள்.

| மாதம் | நாள் | சென்வை | இரங்கூன் | பினங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| பிரமாதி மாசி | 30 | 0-6-0 | 0-4-9 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| பங்குனி | 30 | 0-6-6 | 0-5-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| விக்கிரம சித்திரை | 31 | 0-6-9 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| வைகாசி | 31 | 0-6-6 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| ஆனி | 32 | 0-6-3 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-6 |
| ஆடி | 31 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-6 |
| ஆவணி | 31 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-6 |
| புரட்டாசி | 31 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| ஐப்பசி | 30 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| கார்த்திகை | 29 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| மார்கழி | 30 | 0-6-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| தை | 29 | 0-6-0 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |





## விற்பனை வரி வசூல்

### சென்னை சர்க்கார் உத்தரவு

விற்பனை வரி வசூல் சம்பந்தமாகச் சென்னை சர்க்கார் அடியிற் கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கின்றனர்:—

விற்பனை வரிக்குட்பட்ட சில வியாபாரிகள், அவ்வரியைத் தாங்கள் விற்கும் பண்டங்களுடன் சேர்த்து வசூலித்து வருகின்றனர். இத்தத் தொகையும் வரிவிதிப்புக்கு உட்பட்டதா என்ற பிரச்னை கிளம்பியிருக்கின்றது. சட்ட அம்சத்தைக் கொண்டு மட்டும் கவனித்தால் இதற்கும் வரிவிதிக்கலாம். இம்முறையைத் தான் வியாபார வரி இலாகா அதிகாரிகள் செய்துவந்திருக்கின்றனர். சர்க்கார் இப்பிரச்னையை மீண்டும் ஆலோசித்து விற்பனையைப் பண்டம் வாங்குவோர் மீது சுமத்துவது ஏதாவது ஒரு வழியில் நடந்து தான் வருகிறது என்று அபிப்பிராயப்பட்டு வந்திருக்கின்றனர். வியாபாரிகள் தனியாக விற்பனை வரிவசூலிப்பதானால், அதைப் பட்டியலில் தனியாகக் குறிப்பிட வேண்டும். ஆகவே அவ்வாறு தனியாக வரியை வசூலிக்கும் வியாபாரிகள் அதைப் பிரத்தியேகமாகப் பட்டியலில் குறிப்பிட்டால், அவ்வாறு வசூலிக்கப்பட்ட தொகைக்கு வரிவிதிப்பதில்லை யென்று சர்க்கார் முடிவு செய்திருக்கிறார்கள். ஏப்ரல் முதல் தேதி முதல் இவ்வுத்தரவு அமுலுக்கு வந்திருக்கிறது.

### "ஓரியண்ட"லின் அபிவிருத்தி

31-12-40உ யோடு முடிந்த ஒரு வருஷத்திற்கு ஷை கம்பெனியாருக்குக் கிடைத்த புதிய பாலிஸிகள் மொத்தம் 35,764. கிடைத்த பிஸினஸ் தொகை ரூ 7,48,85,948.

### ஒரு பெண்ணைப் புரோகிதருக்கு விற்றதாக

சென்ற மே-மீ தாம் ஒரு உத்யோகஸ்தன் என்று நடித்து கிருஷ்ணமூர்த்தி ஐயர் என்பவர் கோயம்புத்தூரில், 11 வயதுள்ள நாயர் பெண்ணைத் தனக்கு வேலைக்காரியாக வைத்துக்கொள்வதாகச் சொல்லி அவள் தாயிடமிருந்து அழைத்துச் சென்றாராம். அவர் அப்பெண்ணை நெல்லூருக்குக் கொண்டுபோய் கிருஷ்ணையா என்ற புரோகிதருக்கு 500 ரூபாய்க்கு விற்றதாக வழக்குத் தொடரப்பட்டது. கோவை உதவி செஷன்ஸ் ஜட்ஜ் எதிரிக்கு ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

### இந்திரா நேரு

பண்டித ஜவாஹரின் புத்திரி மிஸ் இந்திரா நேரு இந்தியாவுக்கு வரும் வழியில் தென் ஆப்ரிக்கா வந்து சேர்ந்திருப்பதாகத் தெரிகிறது.

### கிரேஸியானி ராஜினாமா

ஆப்ரிக்காவில் இத்தாலிய சேனாதிபதியாயிருந்த மார்ஷல் கிரேஸியானி தமது பதவியை ராஜினாமாச் செய்துவிட்டார்.

### நேருவைப் பேட்டிகாண அனுமதி மறுப்பு

தேசியத் தொழில் திட்டக் கமிட்டி வேலைகள் சம்பந்தமாகச் சிறையில் பண்டித நேருவைக் கண்டுபேச ஷை கமிட்டிக் காரியதரிசிக்கு அனுமதி அளிக்கப்படவில்லை. பண்டித நேரு சிறையிலிருப்பது வரை, ஷை கமிட்டியின் வேலைகளைக் கவனிக்க சர்க்கார் சம்மதிக்க முடியாது என்று ஐ. மா. சர்க்கார் தெரிவித்து விட்டனர். இது சம்பந்தமாக வைஸ்ராயிடம் விண்ணப்பித்திருப்பதாயும், வைஸ்ராய்க்கும் கவர்னருக்கும் கடிதப் போக்கு வரத்து நடப்பதாயும் ஒரு செய்தி வெளியாகியிருக்கிறது.

### 'தங்கத்தைக் கொடுத்துவிடு' ஜப்பான் சர்க்கார் உத்தரவு

தங்கள் வசமுள்ள தங்க நகைகள் முதலிய சகல தங்கப் பொருள்களையும் ஜப்பானியப் பிரஜைகள் தங்களிடம் ஒப்படைத்துவிட வேண்டுமென ஜப்பானில் உத்தரவிடப்பட்டிருப்பதாக மாஸ்கோ ரேடியோ தெரிவித்திருக்கிறது.

## ராணித்தலை ரூபாய்

### செப்டம்பர் வரைச் செல்லும்

1941, மார்ச் 31ந் தேதிக்குப் பிறகு ராணித் தலை ரூபாய்கள் செல்லுபடியாகாவெனினும், செப்டம்பர் 30-ந் தேதி வரையிலும் (அடுத்த ஆறு மாதம்) சகல சர்க்கார் கஜானாக்களிலும் அவை வாங்கிக் கொள்ளப்படும். சகல தபாலாபீசுகளிலும் அவை ஏற்றுக் கொள்ளப்படும். சர்க்கார் நிர்வாகத்திலுள்ள ரயில்வே ஸ்டேஷன்களிலும் வாங்கிக் கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. 1941, செப்டம்பர் 30-ந் தேதிக்குப் பிறகு மறு உத்தரவு வரை பம்பாய், கல்கத்தாவிலுள்ள ரிசர்வ் பாங்கியில் மட்டுமே வாங்கிக் கொள்ளப்படும்.

### கிழிந்த ஒரு ரூ. நோட்டு

கிழிந்த ஒரு ரூபாய் நோட்டுகளைக் கிராமங்களில் 8 அணாவுக்கும், 10 அணாவுக்கும் ஜனங்கள் மாற்றுகிறார்கள் என்று இந்தியா சட்டசபையில் பிரஸ்தாபிக்கப்பட்டதன் மேல் இதுபற்றி இந்திய சர்க்கார் ஒரு உத்தரவு பிறப்பித்திருக்கின்றனர். பாதிக்கு மேல் சேதப்படாமலிருக்கும் அசல் நோட்டுகளுக்கு முழுத் தொகையும் கொடுத்துவிடும்படி சர்க்கார் கஜானாக்களுக்கும், இம்பீரியல் பாங்குக் கிளைகளுக்கும் உத்தரவிடப்பட்டிருக்கிறது. ஆனால் அடையாளம் தெரியாதபடி கிழிந்திருக்கும் கோட்டுகளை முன்போல ரிசர்வ் பாங்குக்கே அனுப்பவேண்டும்.

### கவி தாகூரின் ஜனன தினவிழா

கவிதாகூரின் 80வது பிறந்த தினத்தைக் கொண்டாட கல்கத்தா சர்வகலாசாலை தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது.

### அலகு குத்தத் தடை

வீரசிங்கன் பேட்டை ஸ்ரீ மாரியம்மன் திருவிழாவின் போது (ஏப்ரல் 6,7 தேதிகளில்) அலகு குத்திக் கொள்ளக் கூடாதென்று தஞ்சை சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட் தடை உத்தரவு பிறப்பித்திருக்கின்றார்.

பொய் சொல்லுவதனால் ஒரே ஒரு இலாபந்தானுண்டு. உண்மை பேசினாலுங்கூட, பிறர், உன்னை நம்பாதிருக்கச் செய்வது ஒரு இலாபந் தானே! "தீபியன்"

## சீதனப் பண வழக்கு

### சென்னை ஹைக்கோர்ட்டு தீர்ப்பு

ஒருவரிடம் ஒப்படைக்கப்பட்ட சீதனத் தொகையைத் திரும்பப் பெறுவதற்காகத் தொடரப்பட்ட வழக்கை, காலகாணம் பாதிக்குமா என்ற பிரச்னையில் சென்னை ஹைக்கோர்ட்டில் வாதிக்குச் சாதகமாக நீதிபதி ஜென்றில் தீர்ப்புக் கூறியிருக்கிறார்.

1919-மே மீ, முதல் வாதிக்குக் கல்யாணம் நடந்தபோது, நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சமூக வழக்கப்படி, சுமார் 2000 ரூ. சீதனப் பணமாகப் பிரதிவாதியிடம் ஒப்படைக்கப்பட்டது. முதல் வாதி (புருஷன்) பேரால் அவரது மாமனார் மாறலில் பிரதிவாதியின் கணக்கில் இத்தொகை தாக்கல் செய்யப்பட்டது. பிரதிவாதி ஒழுங்காக வட்டிச் சிட்டை அனுப்பி வந்தார். தொகை எவ்வளவு என்பதையும் வாதிக்குத் தெரிவித்தார். அவரது மனைவி 1938ல் இறந்துபோனான். அதே வருஷத்தில் 10,000 ரூபாய்க்கு 1-ம் வாதியும் 2-ம் வாதி (அவர் மகன்)யும் வழக்குத் தொடர்ந்தனர். 1926-ல் தாம் தொகை முழுவதையும் மாறல்தாரிடம் ஸெட்டில் செய்து கொடுத்துவிட்டதாயும், எவ்விதத்தாலும், கேசு காலகாணத்தால் பாதிக்கப்பட்டிருப்பதாயும், 1927-ல் கூட வாதி அதைக் கேட்டதாயும் பிரதிவாதி கூறினர். கணக்குகள் ஸெட்டில் செய்யப்படவில்லை யென்று நீதிபதி அபிப்பிராயப்பட்டார். தொகையை வெறும் டிப்பாஸிட்டாகக் கருதக் கூடாதென்றும், ஆனால் அது ஒரு 'டிரஸ்டு' என்றும் ஆகவே அதற்குக் காலகாணம் இல்லை யென்றும் தெரிவித்து, தம்பதிகளுடைய குழந்தைகளுக்கு 'உபயோகப்படும்படியாகவே கல்யாண காலத்தில் இந்த வெகுமதி கொடுக்கப்படுவதாயும், நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சமூகத்தில் இது டிரஸ்டாகவே பாவிக்கப்படுகின்றதென்றும், ஆகவே புருஷனுக்கு இதில் உரிமையில்லை யென்றும் குறிப்பிட்டு, நீதிபதி 2-வது வாதி (மகன்)க்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தார்.

### முஸோலினி கொலையுண்டதாக வதந்தி

இத்தாலியில் புரட்சி ஏற்பட்டு முஸோலினி கொல்லப்பட்டு விட்டதாயும், அம்பர்டோ இளவரசரோ, மார்ஷல் படாக்ளியோவோ இத்தாலியின் புதிய தலைவராகி விட்டதாகவும் பெல்கிரேடில் ஒரு வதந்தி பரவிற்று.





## இந்திய வீரரின் இணையற்ற வீரம்

### 2 பேர் ஒரு இத்தாலியப் படையையே எதிர்த்து நின்றனர்

இத்தாலிய எரிட்ரியாவில் கெரென் பகுதியை பிரிட்டிஷ் படைகள் சமீபத்தில் தாக்கியபோது இரண்டு இந்திய ஸோல்ஜர்கள் காட்டிய வீரத்தை யாரும் மறக்கமுடியாது. இந்தப் போராட்டத்தில் எதிரியின் முன்னணி ஸ்தானங்களைப் பீரங்கிகளால் தாக்குவதற்கு அனுகூலமாக நம்முடைய முன்னணி வீரர்கள் சிலர் தாற்காலிகமாய்ப் பின்னே அழைக்கப்பட்டனர். ஆனால் யந்திர பீரங்கி ஸ்தலமொன்றைக் கவனித்து வந்த இரண்டு இந்திய ஸோல்ஜர்களுக்கு இந்தச் செய்தி எட்டவில்லை. இவர்களிருவரும் 48 மணி நேரம் தங்கள் ஸ்தானத்தைவிட்டு அசையாமல் நின்று பகைவரின் கடுமையான எதிர்த்தாக்குதலை முறியடித்தனர். இரண்டு நாட்களுக்குப் பிறகு அவர்கள் படையைச் சேர்ந்தவர்கள் சிலர் வேவு பார்க்கச் சென்றபோது அவர்களிருவரையும் கண்டனர். ஏன் பின் வாங்கவில்லை என்று அவர்களைக் கேட்டதற்கு அவர்கள் மிகவும் சாவதானமாக 'பின் வாங்கும்படி உத்தரவு எங்களுக்குக் கிடைக்கவில்லை; அதனால் இங்கேயே இருந்தோம்' என்று பதில் சொல்லிவிட்டு, 'எங்களிடமிருந்த தோட்டாக்களை நாங்கள் வீணாக்கவில்லை; சுற்றிலும் பாருங்கள் தெரியும்' என்றார்கள். அந்தச் சமயத்தில் அவர்களுடைய உணவு தண்ணீரெல்லாம் முற்றிலும் தீர்ந்துபோய் தோட்டாக்களும் ஒரு சோலை தாய் இருந்தது, என்று தெரிகிறது.

[ஆசிரியர்: பி. ஸ்ரீ. பக்கம்: 266. வெளியிட்டோர்: தமிழ் இலக்கியக் கழகம், ஜி. டி. சென்னை. விலை: ரூ. 5.]

மதிப்புரை

# * கம்ப சித்திரம் *

(பால காண்டம்)

★

"இலக்கியக் கல்வியின் தலையாய வரம்பு என்று எண்ணத்தகுவது, கம்பனது கவிதைகளை நெறிப்பட ஆராய்ந்தறிந்து இன்புறுதலாகும்" என்று சென்னை சர்வகலாசாலை, தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் ஸ்ரீமான் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் தமது முன்னுரையில் குறிப்பிடுகின்றார். அத்தகைய கம்பனது கவிதையின் சொல்லிலும், பொருளிலும், பாவத்திலும் அல்லும் பகலும் திளைத்து, அவனது கவியமுதை அருந்தும் தமிழ் அறிஞர் ஸ்ரீமான் பி. ஸ்ரீ. ஆசார்யா அவர்கள், தாம் பெறும் இன்பம் பெறுக இத்தமிழகம் என்ற உயரிய நோக்குடன், தமிழுலகிற்கு இந்நூலை வழங்கியிருக்கிறார். கம்பனது கவிதை இன்பத்தை நுகர இந்நூல் ஒரு சிறந்த வழிகாட்டி யென்பதில் ஐயமில்லை. வெறும் மூலமும், பதவுரையும், விருத்தியுரையுங்கொண்டு கம்பனது காவிய அரண்மனையின் அழகுகளை அறிந்து கொள்ளமுடியாது. ஆனால், தமது ஆராய்ச்சித் திறமையாலும், சொல்வன்மையாலும் இவ்வாசிரியர் தமது விளக்க சித்திரங்களால், கம்பனது கவிதா சித்திரங்களை எளிய முறையில் நம் மனக் கண்ணில் படும்படி செய்திருக்கிறார். கம்பனை நன்குணர்ந்து அறிதற்கு இவர் காட்டியுள்ள வழியே சிறந்த வழி யென்பதிலும் ஐயமில்லை. "பாடப்பாடப் பொங்கி வருகிறது, கடல்போலே—கடலமுதம் போலே—கம்ப ராமாயணம் என்ற தெய்வமாக் கவிதை"; படிக்கப் படிக்க இன்பம் பொங்கி வருகிறது இந்தக் கம்ப சித்திரம்.

கம்பன் காவிய மூலத்தில் பால காண்டத்திலுள்ள ஆயிரத்துக்கு மேற்பட்ட கவிகளிலிருந்தும் 30½ கவிகளைத் தேர்ந்தெடுத்து ஸ்ரீமான் பி. ஸ்ரீ. தமது சித்திரத்தை அமைத்திருக்கிறார். ஒவ்வொரு பாட்டுக்கும் கீழே அரும்பதவுரை கொடுக்கப்பட்டிருக்கிறது. அதைத் தொடர்ந்து கட்டுரைபோல் விளக்கவுரை அமைந்திருக்கிறது. ஆசிரியர் விளக்க உரையில் தமது திடமான கருத்துக்களை, சிறிதும் தடங்கலின்றித் தெளிவாக எடுத்துக்கூறியிருப்பது பாராட்டத்தக்கதாகும். "கோசலம் என்பது கம்பன் கனவுதான்; அது பழைய கோசல நாடன்று; ஒரு புதிய சமுதாயம்—எதிர்கால உலகம். இராம ராஜ்யம் என்பது இறந்தகால உலக சரித்திரத்திலே காணும் இராஜ்யங்களில் ஒன்றன்று; அது தீர்க்க தரிசிகளான மகா கவிகளின் காட்சியிலே காணப்படும் எதிர்கால உலகம். கம்பன் வருணிக்கும் கோசல நாட்டின் ராஜதானி உண்மையில் கற்பனை நாட்டின் மானஸ ராஜதானி" என்றெல்லாம் ஆசிரியர் மிகுந்த தைரியத்துடன் தமது கருத்தை வெளியிட்டிருக்கிறார். அதே போல, மூலபாட அமைப்பிலும் ஒரு பெரும் புரட்சியை உண்டு பண்ணியிருப்பது கவனிக்கத்தக்கது. ஒரு முறை மூலத்தைப் படித்தவுடனேயே பொருள் எளிதில் தானுகத் தோன்றும் படியாக, வாசகர்கள் சந்தி விகாரம் இவற்றில் சிக்கி விழிக்காதபடி செய்திருக்கிறார். பண்டைத் தமிழ் நூல்களை சாதாரண மக்கள் எளிதில் படிக்க ஆசைகொள்ளாதவாறு தடுத்து அவர்களைப் பயங்கொள்ளச் செய்வன இவைதான். 'கம்ப சித்திர'த்தில் செய்யப்பட்டுள்ள இப்புரட்சி ஒரு வழிகாட்டியாக இருக்குமானால், அது தமிழ் மக்களுக்கும், தமிழ் நூல்களுக்கும் ஒரு பெரிய நற்காலமாகும் என்று சொல்லலாம். உதாரணமாக இங்கு ஒன்று எடுத்துக் காட்டலாம்:

இன்றளிர்க்கற் பகநறுந்தே
    னிடைதுளிக்கு
நிழலிருக்கை யிழந்து போந்து
நின்றளிக்குந் தனிக்குடையி
    னிழலொதுங்கிக்
குறையிரந்து நிற்ப நோக்கிக்
குன்றளிக்குங் குருமணித்தோட்
    சம்பரனைக்
குலத்தோடுந் தொலைத்து நீகோண்
டன்றளித்த வரசன்றே
    புரந்தரனின்
றாள்கின்ற தரச வென்றான்.

இந்தக் கவி 'கம்ப சித்திர'த்தில் எப்படி அமைந்திருக்கிறது பாருங்கள்:

"இன்தளிர்க் கற் பகநறுந்தேன்
    இடைதுளிக்கும்
நிழலிருக்கை இழந்து போந்து,
நின்றளிக்கும் தனிக்குடையின்
    நிழலொதுங்கிக்
குறையிரந்து நிற்ப, நோக்கிக்
குன்றளிக்கும் குருமணித்தோட்
    சம்பரனைக்
குலத்தோடும் தொலைத்து
    நீ கொண் (டு)
அன்றளித்த அரசன்றே, புரந்தரன்
    இன் (று)
ஆள்கின்ற (து) அரச!" என்றான்.

மேற்கோள் குறி, ஆச்சரியக்குறி முதலியவற்றுடன் படிப்போர் எளிதில் உணரும்படி இப்புதிய முறை அமைந்திருக்கிறதன்றோ?

பால காண்டத்தை 23 பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான, கவர்ச்சிதரும் பெயர்களைக் கொடுத்திருக்கிறார். முன்னுரை யாசிரியர் குறிப்பிட்டிருப்பது போன்று, தினந்தோறும் நாம் வழங்கும் பேச்சு முறையையே இவரும் கையாண்டு நம் உள்ளத்தை எளிதில் வசமாக்குகிறார். புத்தகம் அழகிய முறையில் தயாரிக்கப்பட்டிருக்கிறது. காதல் நோயால் வருந்தும் சீதை தன் மனக் கண் முன்னே ராமனைக் கண்ட காட்சியைச் சித்திரிக்கும் ஸ்ரீ ஆர்யாவின் அழகிய வர்ணச் சித்திரப் படம் இந்நூலுக்கு அணியாக விளங்குகின்றது. தமிழர்கள் இதை ஆதரித்தால், அவர்கள் கம்பனது 'செஞ்சொற் கவியின்ப'த்தைப் பருகுவதோடு, கம்ப ராமாயண வுணர்ச்சி நம் நாட்டில் மிக்க விரைவினில் பரவவும் உதவி செய்தவர்களாவார்கள். ஸ்ரீ பி. ஸ்ரீ. ஏனைய காண்டங்களையும் வெளியிட உதவியாயிருக்கும். ஆனால் ஒன்று இங்கே குறிப்பிடுதல் அவசியம். இந்நூலை வெளியிட ஸ்ரீ ஆச்சார்யா பெரு முயற்சி யெடுத்துக் கொண்டிருக்கிறார். இவ்வளவு அரிய முயற்சிக்கும், இத்தகைய உயர்ந்த பதிப்புக்கும் இதில் குறிப்பிட்டுள்ள விலை அதிகமன்று. ஆனால், பிற நாடுகளில் உயர்ந்த நூல்களை ஏழைகளும் சாதாரண மக்களும் எளிதில் வாங்கிப் படிப்பதற்கு ஏற்றவாறு 'மலிவான பதிப்பு' வெளியிடுவது வழக்கம். அதே போல, இந்நூலுக்கும் ஒரு 'மலிவான பதிப்பு' வெளியிட்டால் பேருபகாரமாக இருக்குமென்று சொல்ல விரும்புகிறோம்.

## வெற்றி யாருக்கு?

[ஆசிரியர்: ஸ்ரீ பொ. திரிகூடசுந்தரம் எம். ஏ., பி. எல். பக்கம்: 104. விலை; 12 அணு. கிடைக்குமிடம்: நவயுகப் பிரசுராலயம் லிமிடெட், ஜி. டி., சென்னை.]

இதில் 14 கட்டுரைகள் அடங்கியிருக்கின்றன. 'இந்நூலின் கட்டுரைகள் ஒவ்வொன்றிலும் உயிர்த் தத்துவம் தாண்டவமாடுகிறது' என்று சென்னை சர்வகலாசாலை, தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் ஸ்ரீமான் எஸ். வையாபுரிப் பிள்ளை தமது முன்னுரையில் குறிப்பிடுகின்றார். ஸ்ரீ திரிகூடசுந்தரம் பிள்ளை சிறந்த தேச பக்தர்; தமிழிலும் ஆங்கிலத்திலும் தேர்ந்த புலமை உடையவர்; நல்ல எழுத்தாளர். இலக்கியச் சுவை கமழ, எளிய, இனிய நடையில் அவர் வரைந்துள்ள இக்கட்டுரைகள் படித்தின்புறத் தக்கனவாகும். 'எனது நண்பர்கள்', 'பாப்பர் . யார்?' 'இந்த மூவர்', 'சுதந்திரத்திற்குச் சுருக்க வழி' முதலிய கட்டுரைகள் உயிர் பெற்றெளிரும் நடைச் சித்திரங்களாக அமைந்து பல அரிய உண்மைகளையும் விளக்குகின்றன. ஆண்களும், பெண்களும் படித்துப் பயன் பெறத்தக்க கட்டுரைத் தொகுதி இது.

## நன்றிகெட்ட கோவிந்தன்

காரைக்கால் 'நியாயாபிமானி' பத்திராதிபர் ஸ்ரீ வை. சுப்பையா முதலியார் எழுதியுள்ள சிறு கதை. செய்ந் நன்றி மறப்பது பெரிய பாதகச் செயல் என்பதை விளக்குகின்றது. விலை ஒரு அணு.

## தனவணிக சமூகச் சீர்திருத்தம்

தேவகோட்டை தனவைசிய இளைஞர் சங்கத்தார் இத்தலைப்புடன் வெளியிட்டிருக்கும் பிரசுரமொன்று கிடைக்கப்பெற்றோம். ஆண்டுக் கொருமுறை, மாசி மகத் திருநாளில் தனவணிக சமூக முன்னேற்றங் கருதி இதைப் பிரசுரிக்கின்றார்கள். இவ்வருஷப் பிரசுரத்தில் தனவணிக மரபினர் எவ்விதமான புதுத் தொழில்களை ஆரம்பித்து நடத்தலாமென்பதுபற்றிய கருத்துரைகள் அடங்கி யிருக்கின்றன. பல கைத் தொழில்களில் நாட்டம் செலுத்தி அவற்றை அபிவிருத்தி செய்து பலனடையலாமென்று கல்லுப்பட்டி திரு. அழ. சித. வீரப்ப செட்டியார் தமது கட்டுரையில் வலியுறுத்துகின்றார். கொழும்பு திரு. மாணிக்கம் செட்டியார் கைத்தொழிலுடன் வியாபாரத்தையும் கவனித்தல்

[9-ம் பக்கம் பார்க்க]





# யூகஸ்லேவியாவில் புரட்சி

## பீடர்மன்னர் பதவியேற்றார்

முத்தரப்பு உடன்படிக்கையில் யுகஸ்லேவியா கையெழுத்திட்ட விஷயம் ஏற்கனவே வெளியாகி யிருக்கிறது.

ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டதைக் கண்டிக்கும் முறையில் யுகஸ்லேவியா முழுவதும் ஆர்ப்பாட்டங்கள் நடந்தன.

### புரட்சி

மார்ச் 27௳ அதிகாலையில் பெல்கிரேடில் சிறிதும் ரத்தம் சிந்தாமல் ஒரு புரட்சி நடைபெற்றது. அச்சு நாடுகளுடன் யுகஸ்லேவியா சார்பாகக் கையெழுத்திட்ட பிரதம மந்திரி வெட்கோவிச்சும் வேறு பல மந்திரிகளும் கைதுசெய்யப்பட்டனர். நிர்வாகப்பொறுப்பை யுகஸ்லேவிய மன்னர் பீடரே ஏற்றுக்கொண்டு, ஜெனரல் ஸிமோவிச்சைப் பிரதம மந்திரியாக நியமித்திருக்கிறார். ஸீனியர் ரீஜண்டான பால் இளவரசர் தமது மனைவியுடன் ஏதன்சுக்கு ஓடிவிட்டார். அச்சு நாடுகளுடன் சேர மறுத்து தங்கள் பதவிகளை ராஜிநாமாச் செய்த மாஜி மந்திரிகள் மூவரும் புது மந்திரி சபையில் இடம் பெற்றிருக்கின்றனர். யுகஸ்லேவிய மன்னர் தம் மக்களுக்குப் புதிய மந்திரி சபையை ஆதரிக்கும்படியும் ஒரு பிரகடனம் வெளியிட்டிருக்கிறார்.

29௳ காலை அரண்மனையில் பீடர் மன்னர் பிரமாணம் எடுத்துக் கொண்டார். ரீஜன்ஸிக் கவுன்சில் அங்கத்தினர்களான பால் இளவரசரும், மற்றோரும் தங்கள் பதவிகளை ராஜிநாமாச் செய்து விட்டனர். வாலிப மன்னர் பீடர் சிம்மாசன மேறியதற்குக் காரணமான புரட்சி ஒரு மணி நேரத்திற்குள் பூர்த்தியாகி விட்டது.

ஜனாதிபதி ரூஸ்வெல்ட் யுகஸ்லேவிய மன்னர் பீடருக்கு ஒரு பாராட்டுத் தந்தி அனுப்பினார். ரஷ்ய சர்க்காரும் பாராட்டியிருக்கின்றனராம்.

யுகஸ்லேவியாவுக்குத் தன்னால் ஆனவரைப் பிரிட்டன் உதவும் என்று மிஸ்டர் சர்ச்சில் தெரிவித்திருக்கிறார். யுனைடெட் ஸ்டேட்ஸும் அவ்வாறே உறுதிகூறியிருக்கிறது.

பீடர் மன்னருக்கு 17½ வயது தானாகிறது. தமது 18-வது ஜன்மதினத் தன்று சிம்மாதன மேறுவதென்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

### எல்லை அடைபட்டது

யுகஸ்லேவியாவுக்கும் ஆஸ்டிரியாவுக்குமிடையேயுள்ள எல்லையை யூகோ அதிகாரிகள் அடைத்து விட்டனர். யூகோவிலிருந்து ஜர்மானியரும் இத்தாலியரும் வெளியேறுகின்றனர்.

### ஜர்மன் எச்சரிக்கை

யுகஸ்லேவிய ராணுவத்தைக் கலைத்து விட வேண்டுமென்று ஜர்மன் சர்க்கார் யூகோவுக்கு இறுதி எச்சரிக்கை விடுத்திருக்கின்றனராம்.

முன் பந்தோபஸ்தை முன்னிட்டு யூகோவில் பல ரிசர்வ் படைகள் திரட்டப்பட்டு வருகின்றன.

———

## "யானை டிராம்" வண்டி

### அந்தமான் தீவில் புதுமை

அந்தமானின் விளைபொருட்களான மரங்கள் முதலியவற்றை காட்டுமார்க்கமாக போர்ட் பிளேயர் துறைமுகத்துக்குக் கொண்டுபோவதற்கு அங்கு டிராம்வண்டிப் பாதை போடுவதற்காக இந்திய சர்க்கார் 13,500 பவுன் மான்யம் கொடுத்திருக்கிறார்கள். டிராம்வேபோல தண்டவாளப் பாதை போட்டு அதன் மேல் மரம் முதலியன ஏற்றக்கூடிய சாமான் வண்டித் தொடர்கள் யானைகளால் இழுத்துச் செல்லப்படுமாம். உலகத்திலேயே இது தான் முதல் "யானை இழுக்கும் டிராம் வண்டி" ஆகும் என்று சொல்லப்படுகிறது.

———

அமெரிக்காவிலிருந்து ஜர்மானியர் வெளியேற ஆரம்பித்துவிட்டனர்.

# சத்தியாக்கிரகச் செய்திகள்

## மாஜிப் பார்லிமெண்டரிக் காரியதரிசி கைது

ஐ. மா. சர்க்காரின் மாஜிப் பார்லிமெண்டரிக் காரியதரிசி ஸ்ரீ கோபிநாத் ஸ்ரீ வத்ஸவாவும் லட்சுமணபுரி ஜில்லா போர்டுத் தலைவர் ஸ்ரீ திரிலோக சிங்கும் மார்ச் 25௳ பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டனர்.

## கிழவருக்குத் தண்டனை

26௳ சென்னையில் 12 பேர் சத்யாக்ரகம் செய்தார்கள். இவர்களில் ஒருவர் கிழவர், வயது 82. சோமசுந்தரப் பெரியார் என்பது பெயர். சூளையில் திண்ணைப் பள்ளிக்கூடம் வைத்து நடத்துகிறார். இவர் சீப் பிரஸிடன்ஸி மாஜிஸ்திரேட் முன்பு ஆஜர் செய்யப்பட்டபோது, "பள்ளிக்கூடத்திற்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?" என்று மாஜிஸ்திரேட் கேட்டார். "15 நாள் லீவு விட்டு விட்டேன்" என்று சத்யாக்ரகி பதிலளித்தார். அவருக்கு 10 ரூபா அபராதமும், தவறினால் ஒரு வார வெறுங்காவல் தண்டனையும் விதிக்கப்பட்டன.

## ஸ்ரீ சங்கு சுப்ரமண்யம்

பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டுள்ள ஸ்ரீமான்கள் சங்கு சுப்ரமணியமும் ஆக்கூர் அனந்தாச்சாரியும் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில் முன்பு சத்யாக்ரகம் செய்தனர். தங்களைச் சிலர் நாஜிகளின் ஏஜண்டுகள் என்று கூறுகின்றார்களென்றும், அதைத் தாம் மறுப்பதாயும், பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஜெர்மன் சர்வாதிகாரியின் நட்பைத் தேடிக்கொண்டிருந்த காலத்திலேயே தங்கள் தலைவரான பண்டித ஜவாஹர் நாஜிக் கொள்கையை எதிர்த்தாரென்றும் ஸ்ரீ சங்கு சுப்ரமண்யம் கூறினார். தலா 15 நாள் கடுங்காவலும் "பி" வகுப்பும் அளிக்கப்பட்டன.

## சத்யாக்ரகிகள் தொகை

தமிழ் நாட்டில் சத்யாக்ரகம் ஆரம்பமாகி மார்ச் 23-ந் தேதி வரை மொத்தம் 788 பேர் சத்யாக்ரகம் செய்திருக்கின்றனர். தண்டனை அடைந்த பேர் 413; அபராதம் விதிக்கப்பட்டவர் 230 (சிறைத்தண்டனை அடைந்தவரிலும் பலர் அபராதம் விதிக்கப்பட்டனர்); டில்லி நோக்கிச் செல்பவர் 203; ரிமாண்டி விருப்பவர் 122; பாதுகாப்புச் சட்டப்படி கைதியானவர் 18; நியூஸன்ஸ் சட்டப்படி தண்டிக்கப்பட்டவர் 32. ஆரம்ப முதல் இதுவரை ரூ. 45,015 அபராதம் விதிக்கப்பட்டிருக்கிறது.

## ஸ்ரீ லெ. நடேசன் செட்டியார் சத்தியாக்ரகம்

முன்பு சத்யாக்ரகம் செய்யப்பட்டு தண்டனையின்றி விடுதலை செய்யப்பட்ட கொத்தமங்கலம் ஸ்ரீ லெ. நடேசன் செட்டியார் மார்ச் 23௳ காலை 10 மணிக்கு இரண்டாவது முறையாக கானாடுகாத்தானில் 1000 ஜனக் கூட்டத்துக்கு முன் சத்யாக்ரகம் செய்தார். ஏராளமான மாலைகள் அணிவிக்கப்பட்டன. போலீசார் பிரசன்னமாயிருந்தும் கைது செய்யவில்லை.

## கரூர் தம்பதிகள் சத்யாக்ரகம்

மார்ச் 26௳ கரூர் ஸ்ரீமான் டி. கோவிந்தராஜலு நாயுடுவும் அவரது மனைவி ஸ்ரீமதி பாப்பம்மாளும் யுத்த எதிர்ப்பு கோஷம் செய்து கைதியாயினர்.

## காட்டில் விட்டனர்

பெரம்பலூரில் கைது செய்யப்பட்ட இரு சத்யாக்ரகிகளை மோட்டாரில் ஏற்றிச்சென்று வேப்பூர் காட்டிலும், மற்றொருவரைத் தொழுதூர் காட்டிலும் போலீசார் இறக்கிவிட்டார்களாம்.

## ஜர்மன் ஸ்திரீக்கு அபராதம்

ஸ்ரீமதி எஸ். லட்சுமண ராவ் (ஜர்மன் ஸ்திரீ) பெஜவாடாவில் மார்ச் 27௳ சத்யாக்ரகம் செய்தார். அவருக்கு 100 ரூ. அபராதமும் தவறினால் மூன்று மாதக் காவலும் விதிக்கப்பட்டன.

## பம்பாயில் உதவி நிதி

பந்தோபஸ்துக் கைதிகளின் குடும்பங்களுக்கு உதவியளிக்க பம்பாய் பிரஜா உரிமைச் சங்கத்தினர் ஒரு உதவி நிதியை ஆரம்பித்திருக்கின்றனர்.

## ஸ்ரீ அசோக மேத்தாவுக்குக் கடுங்காவல்

காங்கிரஸ் அபேதவாதக் கட்சி அங்கத்தினரான ஸ்ரீ அசோக மேத்தா ஜனவரி 3ந் தேதி யுத்த ஏற்பாடுகளுக்கு விரோதமாகப் பிரசங்கம் செய்ததற்காக மார்ச் 29௳ 4 மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார். அவர் ஏற்கனவே பந்தோபஸ்தில் இருந்து வருகிறார்.

## ஸ்ரீ ஹரிசிங் கைதியானார்

அகில இந்திய தேசியத் தொழில் திட்டக்கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ ஜி. பி. ஹரிசிங்கும் ஸ்ரீ வந்தர்க்காரும் இன்னும் இருவரும் 29௳ சத்யாக்ரகம் செய்யப் போவதாகப் போலீஸ் கமிஷனருக்கு அறிவித்திருந்தனர். ஆனால் அன்று விடியற்காலையிலேயே கைது செய்யப்பட்டனர்.



# காரைக்குடியில் தேசிய—கதர் வாரம்

## ஏப்ரல் 6௳ முதல் 13௳ வரை

மேற்கண்ட தினங்களில் காரைக்குடியில் தேசிய வாரம் கொண்டாடப்படுகிறது. இவ்வாரத்தில் கதர் விற்றலும், மதுவிலக்குப் பிரசாரமும், சேரிகள் சுத்தம் செய்தலும், நூல் நூற்றல் போட்டி முதலியனவும் நடைபெறும். இவ்வாரத்தில் கதர் வாங்குபவர்கட்கு ரூபாய்க்கு ஒரு அணு கமிஷன் உண்டு. 12—4—41 பிற்பகல் 2-மணி முதல் காங்கிரஸ் மாளிகையில் (தக்ளி ராட்டை) நூற்றல் போட்டி நடைபெறும். சேரிகளைச் சுத்தமாக வைத்துக்கொள்ளுபவர்கட்கும் நூற்றல் போட்டிகளில் வெற்றி பெற்றவர்கட்கும் 13—4—41ல் காந்தி சதுக்கத்தில் நடைபெறும் பொதுக்கூட்டத்தில் கதர்ப் பரிசுகள் வழங்கப்படும். 6—4—41ல் கல்லுக்கட்டி மணிக்கூண்டில் மாலை 6-30 மணிக்குப் பொதுக்கூட்டம் நடைபெறும். மற்ற நாட்களில் நகரின் பல பகுதிகளிலும் கூட்டங்கள் நடைபெறும். எல்லோரும் எல்லா நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது.

———

## காரைக்குடியில் சத்யாக்ரகம்

3-4-41 மாலை 6-30 மணிக்கு காந்தி சதுக்கத்தில் கீழ்கண்டவர்கள் சத்யாக்கிரஹம் செய்கிறார்களென்று தெரிகிறது. இவர்கள் டெல்லி நோக்கிப் பிரயாணம் செய்பவர்கள்:

1. தேவகோட்டை மெ. சி. மாணிக்கவாசகம் செட்டியார்.
2. சுப. நடராஜன் தேவகோட்டை.
3. ஆ. தி. ஷண்முகம் செட்டியார், S. சொக்கநாதபுரம்.
4. பொ. செல்லத்துரை விளங்காட்டூர்.

———

## நெற்குப்பையில் சத்தியாக்கிரஹம்

ஸ்ரீ கே. வெங்கிட்ராமய்யர் ஏப்ரல் 5௳ மாலை 5-மணிக்கு நெற்குப்பை ரேடியோ மைதானத்தில் சத்யாக்கிரகம் செய்யப் போவதாக அறிவித்திருக்கிறார்.

## கண்டனூரில்

கண்டனூர் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ சோம. அன்பு. காசியப்ப செட்டியார் ஏப்ரல் 7௳ திங்கள் மாலை 5 மணிக்குக் கமலாநேரு சதுக்கத்தில் சத்யாக்ரகம் செய்யப் போவதாக அறிவித்திருக்கிறார்.

## நாலணு அங்கத்தினர்கள் சத்யாக்ரகம்

ஐக்கிய மாகாணத்தில் ஏப்ரல் 5-ந் தேதி முதல் நாலணு அங்கத்தினர்கள் பலர் சத்யாக்ரகம் செய்வார்கள். தினமொன்றுக்கு 10 வீதம் 1,000 பேர் சத்யாக்ரகம் செய்வார்களாம்.

## சத்யாக்ரகிகளுக்கு பாட்ஜுகள்

டில்லி நோக்கிக் கால் நடையாகச் செல்லும் சத்யாக்ரகிகளுக்கு தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியிலிருந்து அத்தாட்சி பாட்ஜ் விநியோகிக்கப்பட்டிருப்பதாயும், அந்தந்த ஜில்லா காரியதரிசிகளிடம் சத்யாக்ரகிகள் இதைப் பெற்றுக் கொள்ளலாமென்றும் மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ பி. எஸ். சங்கரன் தெரிவித்திருக்கிறார்.

## ஜமீன்தாருக்குத் தண்டனை

மார்ச் 29௳ திண்டிவனம் தாலூகா மரக்காணத்தில் ஜமீன்தார் ஸ்ரீ ராஜமாணிக்க முதலியார் சத்யாக்ரகம் செய்தார். அவருக்கு 2 மாத வெறுங்காவலும் 100ரூ அபராதமும் 'ஏ' வகுப்பும் அளிக்கப்பட்டன.

———

## பாடசாலைகளுக்கு 8 லட்சம் உதவி

சென்னை இரண்டாவது உப வரவு செலவுத்திட்டத்தின்படி, உதவி பெற்ற பள்ளிக்கூடங்களின் கிராண்டுக்காக 8 லட்சம் ரூபா ஒதுக்கப்பட்டிருக்கிறது.

குமரன்

காரைக்குடி
விக்கிரம-ஸூ பங்குனி-மீ 21-உ

## கம்பன் விழா

கம்பன் என்றொரு தமிழன் வாழ்ந்து ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் கழிந்து விட்டன. எனினும் அவன் புகழ் உடம்பு இன்றும் நீடித்து நிற்கின்றது. அவனுக்கு அமரத்தன்மை அளித்தது அவனியற்றிய இராமாயணமே யாகும். தமிழிலும் சரி, பிற மொழிகளிலும் சரி எத்தனையோ நூற்கள், காவியங்கள் இருக்கின்றன. எனினும் அவற்றுள் எதுவும் கம்பனுடைய காவியத்துக்கு ஈடாகாது. "கவிதாலோகத்தின் பேரரசர் என்று சொல்லத் தகுந்தவர்கள் எல்லாம் கம்பனுடைய சந்நிதியில் முடிசாய்த்து வணங்கவேண்டியதுதான், மேல் நாட்டாரால் கவி சிரேஷ்டர்கள் என்று கருதப்படுகிறவர்களுங்கூட — ஷேக்ஸ்பியர், மில்டன் ஆகியோர் உள்பட— கவிதையின் உயர்ந்த அம்சங்களில் கம்பனுக்குக் கீழ்ப்பட்டே யிருக்கின்றார்கள்" என்று காலஞ்சென்ற வ. வெ. சு. ஐயர் சொல்லியிருக்கிறார்.

இன்று தமிழ் நாட்டைக் 'கல்வி சிறந்த தமிழ் நாடு' என்று பாராட்ட வேண்டுமென்றால் அதன் காரணம் இது "புகழ்க் கம்பன் பிறந்த தமிழ் நாடா"க இருப்பதுதான் என்று பாரதியார் பாடியிருக்கின்றார். மேலும், கம்பனைப்போல் வேறு புலவர் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை யென்றும் அறுதியிட்டுக் கூறிவிட்டார். உலகத்தோரெல்லாம் கண்டு வியப்புறக் கூடிய ஒரு வீரமா காவியத்தை, என்றும் அழியாத இலக்கியப் பொக்கிஷத்தைத் தமிழ் நாட்டுக்கு அளித்துச் சென்ற மகா வீரன் கம்பனைப்பற்றித் தமிழ் நாடு எவ்வளவு தூரம் அறிந்திருக்கின்றது? தமிழ் உணர்ச்சியும், கம்ப ராமாயண உணர்ச்சியும் தமிழ் நாட்டில் பரவியிருக்கின்றனவா?

ஒரு ஒப்பற்ற உயிர்க் காவியத்தை உலகுக் களித்த உத்தமனைப் பற்றிய வரலாற்றையாவது தமிழ் மக்கள் உணர்ந்திருக்கின்றார்களா? மற்ற நாடுகளிலே, பெரும் புலவர்கட்கு விழா வெடுக்கின்றனர்; கல்லடித்து நாட்டுகின்றனர்; அவர் தம் பிறந்த தினங்களை தேசிய விழாக்களாகக் கொண்டாடுகின்றனர். ஆனால், தமிழ் நாட்டில் இந்த உணர்ச்சி இப்போது தான் அரும்பி நிற்கிறது. செட்டிமார் நாட்டின் தலைநகரான காரைக்குடியிலே பலர் முன்னின்று சென்ற மூன்றாண்டுகளாகக் கம்பன் திருநாளைத் தொடர்ந்து கொண்டாடி வருகின்றனர். இதனால் தமிழ் நாட்டில் ஒரு விழிப்பு ஏற்பட்டிருப்பது கண்கூடு. இச்சிறந்த ஊழியத்துக்காகக் காரைக்குடி கம்பன் கழகத்தார் பெரிதும் பாராட்டற் குரியராவர். க்ஷேமமுற வேண்டுமெனில், பாரதியார் சொன்னது போல, தெருவெலாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்யவேண்டும்; ஊர் தோறும், கிராமந்தோறும் கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்க்க வேண்டும். தமிழ்நாடு முழுமையும், சாதி மத பேதமின்றித் தமிழர் அனைவரும் கம்பன் காவியத்தை அனுபவிக்கும்படி செய்யவேண்டும்.

நிகழும் பங்குனி 26, 27, 28-தேதிகளில் காரைக்குடியிலும், 29-ந்தேதி கம்பன் கோவில் அமைந்திருக்கும் நாட்டரசன் கோட்டையிலும் கம்பன் விழாக் கொண்டாட, காரைக்குடி கம்பன் கழகத்தார் விரிவான ஏற்பாடுகள் செய்திருக்கின்றனர். தமிழ்ப் பெரும் புலவர்கள் பலர் இவ்விழாவிற் கலந்து கொள்வார்கள். அவர்களது அரிய சொற் பெருக்குகளை ரேடியோமூலம் ஒலி பரப்பவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. தமிழ் நாட்டின் ஏனைய பாகங்களிலும் கம்பன் விழாக் கொண்டாடி, தமிழ் மணம் வீசச் செய்யுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

### காரைக்குடியில் மழை

தாங்க முடியாத வெப்பம் தகித்துக் கொண்டிருந்த சமயத்தில் சென்ற திங்கட்கிழமை பகல் சுமார் 11 மணிக்குத் திடீரென வானம் கறுத்துச் சில தூற்றல்கள் விழுந்தன. அன்றிரவு சிறிது மழை பெய்தது. இதனால் ஓரளவு வெப்பம் குறைந்ததெனினும், மீண்டும் உஷ்ணம் ஏறிவிட்டது. கும்மாய்கள் எல்லாம் வரண்டு கிடக்கின்றன.

### கதா காலட்சேபம்

காரைக்குடி ஸ்ரீ பள. வீர. செ. பெரிய கருப்பன் கல்யாணத்தை முன்னிட்டு இன்று வியாழக்கிழமை மாலை 4 மணிக்கு மணமகன் வீட்டில் 'திருப்புகழ் அமிர்தம்' ஆசிரியர் குக ஸ்ரீ கிருபானந்தவாரி அவர்களின் கதா காலக்ஷேபம் நடைபெறும்.

### பெருமாள் கோவில் உத்ஸவம்

நாகநாதபுரம் பெருமாள் கோவிலில் சென்ற சனிக்கிழமை உத்ஸவம் ஆரம்பமாகிச் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

### ஸ்ரீ வேணுகோபால சுவாமி பிரமோத்ஸவம்

காரைக்குடி ஸ்ரீ வேணுகோபால சுவாமிக்கு வருகிற ஞாயிற்றுக்கிழமை பிரமோத்ஸவம் ஆரம்பமாகிறது. பங்குனி மீ 26உ செவ்வாய் திருச்சறை T.V.S. ராஜரத்தினம் சகோதரர்கள் நாதசுரக் கச்சேரியும், 27உ புதன்கிழமை அரியக்குடி ராமானுஜய்யங்கார் பாட்டு, கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை பிடில், குத்தாலம் சிவவடிவேல் பிள்ளை மிருதங்கம் இவர்களின் சங்கீதக்கச்சேரியும், 28உ வியாழக்கிழமை மாலை ஆவுடையார் கோவில் ஹரிஹர பாகவதாரின் கதா காலக்ஷேபமும், 29உ வெள்ளிக்கிழமை மாலை கும்பகோணம் ஸ்ரீ ஜி கல்யாணராமய்யர் பாட்டு, டி. யஸ். சம்பந்தம்பிள்ளை பிடில், A. K. ரெங்கய்யர் மிருதங்கம் இவர்களடங்கிய சங்கீதக் கச்சேரியும், சித்திரை 1உ ஞாயிறு மாலை திருவிசைநல்லூர் ராமஸ்வாமி சாஸ்திரிகளின் விகடக் கச்சேரியும், 3உ செவ்வாய்க்கிழமை மாலை பாதூர் செல்வ அம்மாள் நாதசுரக் கச்சேரியும் நடைபெறும் என்று அறிவிக்கப்படுகிறது.

### சந்தேகத்தின் மீது கைது

மார்ச் 31உ இரவு காரைக்குடி ஆலங்குடியார் வீதிப் பக்கம் இருட்டில் ஒளிந்து கொண்டிருந்த மதுரையைச் சேர்ந்த ஆறுமுகம் பிள்ளை என்பவனும் இன்னொருவனும் சந்தேகத்தின்மீது கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

### டிரைவருக்கு அபராதம்

சென்ற மகார்நோன்பு விழாவின் போது செக்காலை ரோட்டில் காரை அதி வேகமாகவும், கவனக்குறைவாகவும் ஓட்டி ஒரு குதிரை வண்டியோடு மோதியதாயும், வண்டிக்காரன் கால் ஒடிந்தும், ஒரு கிழவி மீது ஏறிப் படுகாயப்படுத்தியதால் அவள் மாண்டுபோக நேர்ந்ததாயும் குற்றங்கள் சாட்டப்பட்ட கண்டனூர் முத்தையா தாசி என்ற டிரைவருக்கு, திருப்பத்தூர் தாலுகா மாஜிஸ்ட்ரேட் 31-3-41ல் 200 ரூ. அபராதம் விதித்தார்.

### விபசார விடுதி நடத்தியதாக

காரைக்குடி கொட்டடைக்கியார் வீதியில், தன்றப்ப நாயகன் என்பவன் விபசார விடுதி நடத்தியதாக கைது செய்யப்பட்டு ரிமாண்டில் வைக்கப்பட்டிருக்கிறான்.

## தலைவர்களை விடுவிப்பாரா?

### இந்தியா மந்திரியின் மௌனம்

இந்தியாவின் யுத்த முயற்சியை இன்னும் மும்முரமாக்குவது பற்றி மார்ச் 26உ பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் விவாதிக்கப்பட்டது.

"யுத்த முயற்சியில் மிக்க உபயோகமாக சேவை புரியத் தக்க பலர் இந்தியாவில் சிறைகளில் இருந்து வருகின்றன ரல்லவா?" என்று தொழிற் கட்சியைச் சேர்ந்த மிஸ்டர் கார்டன் மக்டனல்டு கேட்டார். "எல்லா இந்தியருடைய ஆதரவையும் பெறவேண்டுமென்பதே எனது எண்ணம்" என்று இந்தியா மந்திரி மிஸ்டர் அமெரி பதிலளித்தார்.

"சிறைகளிலுள்ள அவ்விந்தியர்களை விடுவிப்பது பற்றி மிஸ்டர் அமெரி ஆலோசிப்பாரா?" என்று மிஸ்டர் லோரன்ஸன் கேட்டார். இந்தக்கேள்விக்கு இந்தியா மந்திரி பதிலளிக்கவில்லை.

### காங்கிரஸ் ஆபீசில் போலீஸ் சோதனை

மார்ச் 25உ போலீஸார் காசியில் ஐந்து இடங்களையும், காசி ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டி ஆபீசையும் சோதனையிட்டனர்.

### காரைக்குடி, S. M. S. வித்தியாசாலை பழைய மாணவர் சங்கம்.

ஷை சங்கக் கமிட்டிக் கூட்டம் 2-4-41 காலை 10-மணிக்குத் தலைவர் ஸ்ரீ பனை. மெ. மெ. பழ. வெங்கிடாசலம் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. தேவகோட்டை ஹரிஜன் ரெங்கண்ணா அவர்கள் காலஞ்சென்றது குறித்து இக்கூட்டம் பெரிதும் வருந்துகிறதுடன் அன்னார் குடும்பத்தார்க்கு ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறது என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. காரியதரிசி ஸ்ரீ PL. லெட்சுமணன், பொக்கிஷதார், ஸ்ரீ PL. நாச்சியப்பன் ஆகிய இருவர்களின் ராஜினாமா ஒப்புக்கொள்ளப்பட்டுக் காரியதரிசியாக ஸ்ரீ அரு. அருணசலம் அவர்களும், பொக்கிஷதாராக ஸ்ரீ அ. ராம. ராம. ராமநாதன் அவர்களும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்.

ஆண்டு விழாவை மே மாதக் கடைசி வாரத்தில் நடத்துவதென்றும் நன்கொடை வசூலிப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது. மாஜிக் காரியதரிசி ஸ்ரீ PL. லெக்ஷ்மணன் நமது வித்தியாசாலைக்கு ரேடியோ செட் ஒன்றும் ஸ்ரீ மெ. நா. மெ. மெ. மெய்யப்பன் லவுட் ஸ்பீக்கர் ஒன்றும் வாங்கி உதவியதற்கு நன்றி செலுத்தப்பட்டது.

### விஞ்ஞானப் பிரசங்கம்

புதுவயல் ஸ்ரீ VR. ராமநாதன் செட்டியார் அவர்கள் M. Sc. சென்ற செவ்வாய்க்கிழமை மாலை 5-30 மணிக்கு, காரைக்குடி S. M. S. வித்தியாசாலையில் "Romance of material Universe" என்னும் பொருள்பற்றி ஆங்கிலத்தில் ஒரு விரிவான சொற்பெருக்கு நிகழ்த்தினார். உலகிலுள்ள சகல பொருட்களும் அணுக்களாலாக்கப்பட்டிருப்பதும், அந்த அணுக்களுக்குள்ளே பரமாணுக்கள் அமைந்திருப்பதும், அவற்றைப் பல்வித சக்திகள் பிணைத்திருப்பதும், பொருள்கள் திட, திரவ, வாயு ரூபத்தில் இருப்பதற்குரிய காரணங்களும், எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரப் பொருள்கள் 92 தான் என்பதும், அவை ஹைட்ரஜனிலிருந்து யுரேனியம் வரை வரிசைப் படுத்தப்பட்டிருப்பதும் பிரசங்கியாரால் நன்கு விளக்கப்பட்டன. ஸ்ரீ V. R. M செட்டியார் B.A., தலைமை வகித்துப் பிரசங்கியின் புலமையைப் பாராட்டி, இத்தகைய திறமைசாலிகளைச் சமூகம் ஆதரித்து அவர்கள் இன்னும் தங்கள் ஆராய்ச்சிகளைத் தடையின்றி நடத்தி மேன்மையடையும்படி உதவி புரிவதே கடமையாகுமென்றும் குறிப்பிட்டார். ஷை ஹைஸ்கூல் ஆசிரியர் ஸ்ரீ சுந்தரேசய்யர் அவர்களும், ஹெட்மாஸ்டர் ஸ்ரீ ராமானுஜய்யங்காரவர்களும் பிரசங்கத்தின் முக்கிய பாகத்தைத் தமிழில் விளக்கினர். நன்றிகூறலுடன் சுமார் 8 மணிக்குக் கூட்டம் முடிந்தது.

## ரங்கூனில் பாராட்டு விருந்து

### கல்வி நிலையத்தில் வைபவம்

பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கத் தலைவரும், பர்மா ஜனப்பிரதிநிதி சபை மெம்பருமான திரு. அ. மு. மு. வெள்ளையன் செட்டியாரவர்களை பர்மா கவர்னர் இரங்கூன் நகரக் கார்ப்பரேஷன் கவுன்சிலராக நியமித்ததைப் பாராட்டும் பொருட்டு சென்ற மாசி 26உ இரவு 7-மணிக்கு கம்பை தனவைசியர் கல்வி நிலையத்தில் ஓர் நிலா விருந்து சிறப்பாக நடத்தப்பட்டது. முக்கிய விருந்தினரின் தாய் தந்தையரான திவான்பகதூர் முருகப்ப செட்டியார் தம்பதிகளும் விஜயஞ் செய்திருந்தது குறிப்பிடத்தக்கது. ரங்கூனி விருந்தும், பர்மாவின் இதர பாகங்களி விருந்தும் ஏராளமான பேர் விஜயஞ் செய்திருந்தனர். விருந்துக்குப் பின், செட்டியார்கள் சங்க உப தலைவர் திரு. சா. ராம. சித. அ. நாச்சியப்ப செட்டியாரவர்கள் தலைமையில் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத் தலைவர், காரியதரிசி திரு. சேவு. சி. வெ. வேலாயுதம் செட்டியார் அவர்கள், திரு. கு. மு. கு. முத்தையா செட்டியார் அவர்கள், திரு. சொ. கண. முத்தையா செட்டியாரவர்கள் முதலிய பலர் திரு. வெள்ளையன் செட்டியாரவர்களின் குண நலன்களையும், நகரத்தார் அவர்களின் தற்போதைய நிலைமையையும் எதிர் காலத்தில் செய்ய வேண்டிய வேலைகளையும் விளக்கிப் பேசினர். வந்தன வாழ்த்துடன் வைபவம் முற்றுப்பெற்றது.

### திருடியதாக

காரைக்குடியில் நாராயணன் செட்டியார் என்பவர் வீட்டில் சமையல் வேலை பார்த்துவந்த கறுப்பாயி என்ற பெண் வேறொரு வீட்டில் குழந்தைக்குள்ள நகைகளைத் திருடியதற்காக அவளுக்கு திருப்பத்தூர் தாலூகா மாஜிஸ்திரேட்டு 2 மாதக் கடுங்காவல் தண்டனை விதித்திருக்கிறார்.

### காந்திஜி உத்தரவு

வங்க மாகாணத்தில் வகுப்புக் கலவரத்தால் பாதிக்கப்பட்டுள்ள பிரதேசங்களிலெல்லாம் சத்யாக்ரகத்தை நிறுத்திவைக்கும்படி மகாத்மா காந்தி உத்தரவிட்டிருக்கிறார்.

### சிறையிலிருப்பவர் சேர்மனானார்

தஞ்சை நகர சபைக்கு, சத்யாக்ரகம் செய்து சிறைவாசம் செய்யும் மாஜித் தலைவர் ஸ்ரீ கே. நடராஜனே மறுபடியும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

### உத்தியோக மாற்றம்

சிவகங்கை சப்ரிஜிஸ்திரார் ஸ்ரீ எ. செல்லசிவம் பிள்ளை பி. ஏ., 4 மாத ரஜாவில் செல்வதால் 1-4-41 முதல் மானாமதுரை சப்ரிஜிஸ்டிரார் ஸ்ரீ அப்பாஜி பிள்ளை, பி. ஏ. அவர்கள் சிவகங்கைக்கு மாற்றப்பட்டு வேலைபார்த்து வருகிறார்.

### சென்னையில் "கோடி" தினம்

மார்ச் 31உ முடிய சென்னை கவர்னர் யுத்த நிதிக்கு மொத்தம் ரூபாய் 99,39,403—3—11 சேர்ந்திருக்கிறது. சமீபத்தில் இது ஒரு கோடியாகிவிடும். ஒரு கோடி ரூபாய் சேர்ந்தது, ஏப்ரல் 6,7 தேதிகளில் சென்னையில் கொண்டாடப்படும். ஏழைகளுக்கு உணவளிக்கப்படும். ராணுவ அணிவகுப்பும் நடைபெறும். 7உ செனட் மண்டபத்தில் நடக்கும் பொதுக் கூட்டத்தில் மே. த. கவர்னர் பேசுவார். வெளியூர்களில் 5உ கொண்டாடலாமென்று ஜில்லாக் கலக்டர்களுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது.

### மரண தண்டனை

(நமது நிருபர்)

விருதுநகர் கள்ளுக்கடையில் மகாலிங்க நாடானைக் கொலை செய்த குற்றத்திற்காக 21-3-41ல் ராமநாதபுரம் செஷன்ஸ் ஜட்ஜால் பெரியகருப்ப நாடானுக்கு மரணதண்டனையும் வைரவ நாடானுக்கு தீவாந்தர சிக்ஷையும் விதிக்கப்பட்டன. 3-வது எதிரி ராமநாடான் விடுதலை செய்யப்பட்டான்.



## இந்தோ சீனாவில் படைத்தளங்கள்

### ஜப்பான் வேண்டுகிறது

இந்தோ சீனாவில் ஜப்பானியர் புதிய கோரிக்கைகளை வற்புறுத்தியிருப்பதாக சீன உத்யோகப் பத்திரிகையில் ஆர்ப்பாட்டமாகப் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. கிழக்கு ஆசியாவில் பரஸ்பர க்ஷேம ஏற்பாட்டில் இந்தோ சீன சேரவேண்டுமென்று ஜப்பான் கோருவதாயும், மேலும் ஜப்பான்-இந்தோ சீன ஒப்பந்தமொன்று ஏற்படவேண்டுமென்றும், அதன்படி ஜப்பானியச் சரக்குகளுக்கு இறக்குமதி வரியைக் குறைத்து ஜப்பானுக்குச் சலுகை காட்ட வேண்டுமென்றும் ஸைகான்ஸ் விரிகுடாவில் 2000 துருப்புகளையும் யுத்தக் கப்பல்களையும் நிறுத்துவதற்கு ஜப்பானுக்கு அனுமதியளிக்க வேண்டுமென்றும், காம்ரான் விரிகுடாவிலுள்ள கோட்டைகளை ஜப்பானுக்கு 15 வருஷத்திற்குக் குத்தகையாக விடவேண்டுமென்றும், ஹைபாங்குக்கு வடக்கேயுள்ள பிரதேசங்களில் நிறுத்தப்பட்டுள்ள ஜப்பானியத் துருப்புகளின் தொகை சம்பந்தமாக ஒரு விதக்கட்டுப்பாடு ஏற்படுத்தக்கூடாதென்றும் இந்தோ சீனாவிலுள்ள தரிசு நிலங்களை அபிவிருத்தி செய்வதற்கு ஜப்பானை அனுமதிக்க வேண்டுமென்றும், ஜப்பான் கோரியிருக்கிறதாம்.

### கீரணிப்பட்டியில் திருவிழா

நாளது பங்குனி மீ 17உ ஞாயிற்றுக் கிழமை தினம் விராமதி, கீழச்சிவல்பட்டி, கல்லாப்பேட்டை, இளையாத்தக்குடி, ஆவினிப்பட்டி, கீரணிப்பட்டி, குருவிக்கொண்டான்பட்டி, மிதிலைப்பட்டி, ராங்கியம் முதலிய பனிரெண்டு ஊர்களிலிருந்தும், அதி விமரிசையாக ஏராளமான புஷ்பங்கள் கொண்டுவந்து, பூச்சொரி விழா நடைபெற்றது.

நாளது பங்குனி மாதம் 24உ, ஸ்ரீ அம்பாள் கீரணிப்பட்டிக்கு இளையாத்தக்குடியிலிருந்து போய் காப்புக்கட்டு உற்சவமும், பங்குனி 28உ நகரத்தார்கள் மண்டகப் படியும், விஷு வருஷம் சித்திரை மாதம் 1உ பொங்கலும் 2உ ரதோத்ஸவமும், 3உ ஸ்ரீ அம்பாள் கீரணிப்பட்டியிலிருந்து இளையாத்தக்குடி வருவதுமான உற்சவங்கள் நடைபெறும். ஷை உர்சவத்தில், 10-4-41ல் ஸ்ரீமான் முசிரி சுப்பிரமணிய அய்யர் அவர்கள் சங்கீதக் கச்சேரியும், 11-4-41ல் ஸ்ரீமான் சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் சங்கீதக் கச்சேரியும், 12-4-41ல் மாலை சிவகெங்கை ராம. தசரதராம பாகவதர் அவர்கள் கதாகாலக்ஷேபமும், ஷை தேதிகளில் விசேஷ நாதஸ்வரமும் நடக்கும்.

### இலங்கையரல்லாதார் ரிஜிஸ்திரேஷன்

இலங்கையரல்லாதார் ரிஜிஸ்திரேஷன் சம்பந்தமான மசோதா இலங்கை சட்டசபையில் இரண்டு மணி நேர விவாதத்துக்குப் பிறகு தனிக்கமிட்டியின் பரிசீலனைக்கு விடப்பட்டது.

### குளத்தில் மூழ்கி குருக்கள் மாண்டார்

ராமேஸ்வரம் ஸ்ரீ ராமநாத சுவாமி கோவிலுக்குள் சிவ தீர்த்தத்தில் 35 வயதுள்ள பட்டர் ஸ்ரீ பாலசுப்பிரமணிய சாஸ்திரிகள் மார்ச் 23உ இரவு மூழ்கி மாண்டார்.

### தார்க்கம்புகளை உபயோகிக்கக்கூடாது

காரைக்குடி ஜீவஹிம்சை நிவாரணச் சங்கக் (S. P. C. A.) கமிட்டிக் கூட்டம் 30—3—41ல் தேவகோட்டை சப் கலக்டர் தலைமையில்கூடி, வண்டி யோட்டுபவர்கள் தார்க்கம்புகளை உபயோகிக்கக் கூடாதென்றும், கோழிகளைத் தலை கீழாகத் தூக்கிச் செல்லக்கூடாதென்றும், இரண்டும் கொடுமையான செயல்களாகுமென்றும் பத்திரிகைகள் மூலம் பிரசித்தப்படுத்துவதென்று தீர்மானித்ததாகக் கௌரவக் காரியதரிசி அறிவிக்கிறார்.

### இளையாத்தக்குடி தேவஸ்தானம்

ஷை தேவஸ்தானம் போர்டு ஆப் ட்ரஸ்ட்டீகளின் மீட்டிங் 7-4-41-லும், போர்டு ஆப் கன்ட்ரோலின் மீட்டிங் [illegible]-4-41-லும், ஜெனரல்பாடி நகரத்தார் மீட்டிங் 16-4-41-லும் நடைபெறும் என்று ஷை தேவஸ்தான மானேஜர் அறிவிக்கிறார்.

## கம்பன் திருநாள்



அன்புடையீர்! ★

என்று முள தென்தமிழ் இயம்பி இசைகொண்ட கவிச் சக்ரவர்த்தி கம்பன் திருநாள் விக்ரம ஆண்டு பங்குனித் திங்கள் 26, 27, 28, 29, (ஏப்ரல் 8, 9, 10, 11) செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய நான்கு தினங்களிலும் —முதல் மூன்று தினங்கள் காரைக்குடி சிவன் கோவில் தெற்கு வீதி ஸ்ரீ மீனாட்சி செகண்டரி பெண் பாடசாலையிலும், நான்காவது நாள் நாட்டரசன்கோட்டை கம்பன் கோவிலிலும்— கொண்டாடப் பெறுகிறது. கம்பன் புகழ் பருகிக் கன்னித் தமிழ் வளர்க்க அன்பர்கள் யாவரும் வந்து குழும வேண்டுகிறோம்.

### நிகழ்ச்சி நிரல்

#### 8-4-41 செவ்வாய்

தலைவர்:—திரு. கே. என். குமரேச பிள்ளை அவர்கள், நாகர்கோவில்.

காலை 8-மணிக்கு மேலமடத்திலிருந்து கம்பன் திருவுருவப்பட ஊர்வலம்.

முற்பகல் 9-30 மணி முதல்

இறைவணக்கம், வரவேற்புரை, தலைவருரை.

பிற்பகல் 4 மணி முதல்

"கவியும்—தமிழ் நாடும்" திரு. சொ. முருகப்பா அவர்கள்

"கம்பன் உவமை நயம்"-பண்டிட் தி. இராமாநுஜன் அவர்கள்.

"அவன் தம்பி"-திரு. ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் பி. ஏ., பி. எல்.,

"உரையும்-பாட்டும்"-திரு சா. கணேசன் அவர்களும், திரு. ஏ. எஸ். ராமகிருஷ்ணன் அவர்களும்.

"கம்பனும் கலைப்பண்பும்"-திரு. பொ. திரிகூடசுந்தரன் அவர்கள், M.A.B.L.

"கம்பர் பெருமை"-திரு. சி. பன்னிரு கைப் பெருமாள் முதலியாரவர்கள், எம். ஏ., பி. எல்.

இராமன் பெற்ற இருவரங்கள்"—ராவ்சாஹிப் பண்டிட் மு. இராகவையங்கார்.

#### 9-4-41 புதன்

முற்பகல் 9-மணி முதல்

"கதைப் போக்கை வருணனை தடுக்கிறதா தழுவுகிறதா?" என்னும் பொருள்பற்றிய வாதம். திருநெல்வேலி ஹிந்துக் கல்லூரித் தலைமை ஆசிரியர் திரு. கு. அருணாசலக் கவுண்டர் அவர்கள் தொடங்குவார். பல அறிஞர்கள் வாதத்தில் கலந்து கொள்வார்கள்.

பிற்பகல் 4-மணி முதல்

தலைவர்:—திரு. அ. கி. பரந்தாமனார் அவர்கள், பி. ஏ., பி. எல்.,

"கவிதா தீபம்"— திரு. வி. ஆர். எம். செட்டியார் அவர்கள் பி. ஏ.

"தசரதர் மந்திராலோசனை"— திரு. மு. அருணாசலம் அவர்கள் எம். ஏ.

"கம்பனும் — பெண்மையும்"— திருமதி. நீலாவதி ராமசுப்பிரமணியம் அவர்கள்.

"சொல்லும் — இசையும்"— திரு. சா. கணேசன் அவர்களும், திரு. ஏ. எஸ். ராமகிருஷ்ணன் அவர்களும்.

"கம்பனும் — ஷேக்ஸ்பியரும்"—திரு. அ. சீனிவாசராகவன் அவர்கள் எம். ஏ.

"தமிழ்ப் பண்ணை வளர்ப்பு"— 'வரா'

"கம்பன் காவிய மாளிகை"— திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமானவர்கள்.

#### 10-4-41 வியாழன்

முற்பகல் 9 மணி முதல்

"கம்பனும்—ஒட்டக்கூத்தனும் ஒரு காலத்தவரா?"—என்னும் பொருள் பற்றிய வாதம்.

பிற்பகல் 4 மணி முதல்

"தலைவர்"—ராவ்சாஹிப் ச. வையாபுரிப் பிள்ளை அவர்கள், பி. ஏ., பி. எல்.

"கேள்விச் செல்வம்"—திரு. ஜி. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் எம். ஏ., பி. எல்.

"கல்வியிற் பெரியன் கம்பன்"— திரு. கா. நமினர் மூசமது அவர்கள்.

"கம்பன் யார்?"—திரு. அ. கி. பரந்தாமனார் அவர்கள், பி. ஏ., பி. எல்.

"பருந்தும் நிழலும்"-திரு சா. கணேசன் அவர்களும், திரு. ஏ. எஸ். ராமகிருஷ்ணன் அவர்களும்

"சீதை"-திருமதி. கு. ஞானம்பாள் அவர்கள், எம். ஏ.

"கவி ரோஜா"—வித்வான் அரு. சோமசுந்தரம் செட்டியாரவர்கள்.

கம்பன் கவிநயம்"-திரு. ஆ. முத்துசிவன் அவர்கள், பி. ஏ. (ஆனர்ஸ்)

#### 11-4-41 வெள்ளி

இடம்:— நாட்டரசன்கோட்டை, கம்பன் கோவில்

தலைவர்.— திவான்பஹதூர் டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்கள்.

பிற்பகல் 4 மணி முதல்

"கம்பன் கவிவளம்"— வித்வான் வி. சு. திருநாவுக்கரசு செட்டியார் அவர்கள்.

"கைகேசியின் மனமாற்றம்"— திரு கே. பட்சிராஜன் அவர்கள், பி. ஏ. பி. எல்.

"யுத்த காண்டம் உயர்கலைச் சிகரம்"— திரு. எம். எச். கான்முகம்மது ராவுத்தர் அவர்கள்.

"ஒரு காட்சி"— திரு. சா. கணேசன் அவர்களும், திரு. எஸ். ராமகிருஷ்ணன் அவர்களும்.

"பரதன் தம்பி"—திரு. அ. நா. மகரபூஷணம் அவர்கள், பி. ஏ., பி. எல்.

"கம்பனும்—துளசியும்"— திரு. கா. ஸ்ரீ ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கள்.

"கல்வியில் பெரியவன் கம்பன்"— திரு. ஏ. வி. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

8, 9 தேதிகளில் தினமும் இரவு 9-30 மணிக்கு திரு. ஏ. எஸ். ராமகிருஷ்ணன் அவர்களால் கம்பன் கதாகாலட்சேபம் பக்க வாத்தியங்களுடன் நடத்தப்பெறும்.

## மார்க்கட் செய்தி

### லண்டன் ரப்பர்

லண்டன், மார்ச் 31உ

ரப்பர் ராத்தல் ஒன்றுக்கு பதினொலே வீசம் பென்ஸ்.

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், மார்ச் 29உ

ரப்பர் சிக்கல் ஒன்றுக்கு 51 வெள்ளி 83 காசு

### கொழும்பு ரப்பர்

கொழும்பு, ஏப். 1உ

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் | 57 சதம் |
| ஷீட் ,, | 58 ,, |

### கொப்பரா

| | |
|---|---|
| முதல் தரம் | ரூ. 29·50 |

### சென்னை மார்க்கெட்

சென்னை, ஏப். 1உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 29 | 8 | 0 |
| சவரன் (சில்லறையில்) | 29 | 8 | 6 |
| மூளை தோலா 1க்கு | 42 | 15 | 0 |
| வெள்ளி ரெடி 100 தோலா | 64 | 4 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 10 | 6 |

### இராமகிருஷ்ண விவேகானந்தர் சங்கம் காரைக்குடி

சங்க நிலயத்தில் 30-3-41 ஞாயிற்றுக்கிழமை காலை 10 மணிக்கு தலைவர் ஸ்ரீ கா. சிதம்பரம் தலைமையில் நடைபெற்ற சாதாரண நிர்வாகக் கூட்டத்தில் அடியிற் கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:-(1) ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியாரின் புதல்வரும் இளந் தமிழ் எழுத்தாளருமான ஸ்ரீ டி. வி. தீர்த்தாரப்பன் பி. ஏ. காலஞ்சென்ற செய்தி அறிந்து இச்சங்கம மிக வருந்துகிறது. ஸ்ரீ டி. கே. சி. அவர்கட்கும் அவர் குடும்பத்தினருக்கும் இச் சங்கம் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறது. (2) நமது சங்கத்தின் சார்பில் ஏப்ரல் மாதம் 6உ முதல் 13உவரை தேசிய வாரம் கொண்டாடுவதென்றும் 13உ மாலை காந்தி சதுக்கத்தில் பொதுக்கூட்டம் நடத்துவதென்றும் முடிவு செய்து இந்நகரிலுள்ள எல்லா பொது ஸ்தாபனங்களும் [illegible] கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகின்றது. (3) இந்நகரைச் சுற்றி நடைபெற்று வந்த ஷோக்களை தற்காலிகமாக இரண்டு மாதங்கள் வரை நிறுத்தி வைப்பதென்று அதிகாரிகள் முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது. 'ஷோ" போன்ற சூதாட்டக் கூட்டங்கள் மனித சமூகத்தின் ஒழுக்கத்திற்கும், பணத்திற்கும், நாகரிகத்துக்கும் தீமை விளைவிப்பனவாக இருப்பதால் இப்பகுதிகளில இனிமேல் எக்காலத்தும் இதுபோன்ற களியாட்டக் கூட்டங்களுக்கு லைசென்ஸ் கொடுக்க வேண்டாமென்று இந்த ஜில்லாவைச் சேர்ந்த அரசாங்க அதிகாரிகளை இச் சங்கம் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறது.

### ஹிந்தி போதனை ரத்து

#### சென்னைக் கார்ப்பரேஷன் தீர்மானம்

மார்ச் 26-ந்தேதி நடைபெற்ற சென்னைக் கார்ப்பரேஷன் கூட்டத்தில் வரவு செலவுத் திட்ட விவாதத்தின்போது கார்ப்பரேஷன் பள்ளிக்கூடங்களில் ஹிந்தி கற்பிக்க வேண்டாமென்று ஸ்ரீ தாமோதரம் நாயுடு ஒரு திருத்தம் கொண்டு வந்தார். இதைப் பலர் எதிர்த்தனர். எனினும் முடிவில் திருத்தப் பிரேரணை நிறைவேறியது.

#### கார்ப்பரேஷன் ஊழியர்களுக்குக் கதரில்லை

கார்ப்பரேஷன் ஊழியர்களுக்குக் கதர் வாங்குவதை நிறுத்திவிட்டு, இந்திய மில் துணியை வாங்குவதென்று சென்னைக் கார்ப்பரேஷன் தீர்மானித்திருக்கிறது.

### அய்மேன், ஷண்முகானந்த சங்கம்

இச்சங்கத்தின் 12-வது ஆண்டு நிறைவு விழா உயர்திரு ராம. சுப்பிரமண்யம் அவர்கள் தலைமையில் பங்குனி மீ 27உ நடைபெறும். பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றுவார்கள்.

## சென்னை வீரர்கள் ஆரம்பித்த பீரங்கிப் படை

### ஹாங்காங் சிங்கப்பூர் பீரங்கிப் படையின் சரித்திரம்

நூறு வருஷமாய்ப் பெயர் பெற்றிருக்கும் ஹாங்காங் சிங்கப்பூர் ராயல் பீரங்கிப் படை இன்று மலேயாவின் தற்காப்பு ஏற்பாடுகளில் சரியான பங்கெடுத்துக் கொள்கிறது. இந்தப் படையின் ஹாங்காங் பகுதி இப்போது பிரிந்துவிட்டதால் மலேயப் பகுதிக்குப் பற்பல விதமான அலுவல்கள் ஏற்பட்டிருக்கின்றன. சாதாரணமான பெரிய பீரங்கிகள் பலவற்றோடு விமான எதிர்ப்பு பீரங்கிகள் பலவற்றையும் சர்ச் லைட்டுகளையுங்கூட இந்தப் பகுதியினர் கையாள வேண்டியிருக்கிறது. கடற்கரைப் பாதுகாப்பிற்கு இடம் பெயரும் பீரங்கிப் பிரிவு ஒன்றும் இப்போது அமைக்கப்பட்டிருக்கிறது.

மலேயாவிலும் வடனிலும் இருந்து வரும் பிரிவுக்கு, புதிதாய்ச் சேரும் ஆட்களைப் பழக்கி விடுவதற்கான ஸ்தாபனமொன்றும் இப்போது அமைக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஹாங்காங் சிங்கப்பூர் ராயல் பீரங்கிப் படை 1841-ம் வருஷம் திரட்டப்பட்டது. அப்போது பெரும்பாலும் சென்னை வாசிகள் அடங்கிய படையொன்றைத் திரட்டி "சைஞ லஸ்கர்கள்" என்று அதற்குப் பெயரிட்டார்கள். நாற்பது வருஷங் கழித்து சீக்கியர்களடங்கிய மற்றொரு படை திரட்டப்பட்டது. ஆனால் 1891 வரையில் 'பீரங்கி' என்னும் வார்த்தையே அந்தப் பெயரில் கிடையாது. அந்த வருடத்தில் தான் அது ஹாங்காங் வெஞ்சியாடிக் பீரங்கிப் படையாயிற்று.

1898-ல் இந்தப் படைக்கும் மலேயாவுக்கும் சம்பந்தம் ஏற்பட்டது. அந்த வருஷம் ராயல் காரிசன் பீரங்கிப் படையைச் சேர்ந்த ஹாங்காங் சிங்கப்பூர், ரெஜிமெண்டாக அது அமைக்கப்பட்டது. சிலோனையும் மாரீஷஸையும் சேர்ந்த துருப்புகள் ஒன்பது வருஷங் கழித்து அதில் சேர்த்துக்கொள்ளப்பட்டன. அப்போது ஹாங்காங் சிங்கப்பூர் பட்டாளப் பிரிவு ஒன்று மாரீஷஸில் நிறுத்திவைக்கப்பட்டது. இந்தப் பட்டாளத்தின் பற்பல பிரிவுகளிலிருந்தும் எடுக்கப்பட்ட ஆட்களைக் கொண்டு அமைக்கப்பட்ட மலைப் பீரங்கிப்படை ஒன்று 1915ல் எகிப்துக்கு அனுப்பப்பட்டது. அதன் பிறகு இந்தப் படையின் பெயரும் அமைப்பும் பலதடவை மாறுதலடைந்தன. கடற்கரைப் பீரங்கிகள், மலைப் பீரங்கிகள், விமான எதிர்ப்புப் பீரங்கிகள் முதலிய பலவகையான பீரங்கிகள் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதற்கு வேண்டிய வீரர்களும் இந்தியாவிலுள்ள பல வர்க்கங்கள், ஜாதிகளிலிருந்தும் திரட்டப்பட்டிருக்கின்றனர்.

### பிரிட்டனின் தினசரிச் செலவு

மார்ச் 22-ந் தேதியோடு முடிவான வாரத்தில் தினசரி பிரிட்டனுக்கு 1,46,71,000 பவுன் செலவாகியிருக்கிறது.

### முதுகுளத்தூரில் கொலை

முதுகுளத்தூர் சப் மாஜிஸ்திரேட் ஆபீஸ் காபிஸ்ட் ஜயா என்ற கிருஸ்தவருடைய வைப்பாட்டி அலங்காரம்மாளுக்கும், ஈஸப் ராவுத்தரின் வைப்பாட்டி இன்னுவி அம்மாளுக்கும் ஏற்பட்ட வாக்குவாதம் காரணமாக மார்ச் 27உ இரவு பஞ்சாயத்துக் கூடியதில், ராவுத்தர் கட்சியாருக்கும் ஜயா கட்சியாருக்கும் வாக்குவாதம் முற்றிக் கைகலக்க நேரிட்டதாயும், அதில் ஈசுப்பும் அவர் சகாக்களும் ஜயாவையும் அவர் நண்பர் முருகேசனையும் குத்தியதாயும், ஜயா இறந்துபோனதாயும் தெரிகிறது. முருகேசனிடமிருந்து மரண வாக்கு மூலம் வாங்கப்பட்டிருக்கிறது. ஈசுப் ராவுத்தரும் ஆஸ்பத்திரியிலிருக்கிறார். மைக்கேல் என்ற ஆதிதிராவிடக் கிறிஸ்தவர் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

### ஒரு லட்சம் 10 ரூ. நோட்டுகள் தீக்கிரையாயின

ஒரு லட்சம் மதிப்புள்ள இலங்கை சர்க்கார் 10 ரூ. கரன்ஸி நோட்டுகள் லண்டனில் தீக்கிரையாகிவிட்டனவாம்.

## ஆப்ரிக்காவில் வெற்றிமேல் வெற்றி

### பிரிட்டிஷ் படைகளின் முன்னேற்றம்

அபிசீனியாவில் இரண்டாவது நகரமாகிய ஹாரரை, பிரிட்டிஷார் பிடித்துவிட்டனர். கொனும் பிரிட்டிஷார் வசமாயிற்று.

சென்ற சனிக்கிழமை மூன்றாவது முக்கிய நகரமான டிரடாவாவும் பிடிபட்டது. அஸ்மாரா நோக்கிப் பிரிட்டிஷ் படைகள் முன்னேறுகின்றன. இத்தாலிய யுத்த தளவாடங்கள் பல கைப்பற்றப்பட்டிருக்கின்றன.

### இத்தாலியக் கப்பல்கள் நாசம்

மார்ச் 29உ மத்தியதரைக் கடலில் நடந்த பெரிய போராட்டத்தில் ஐந்து இத்தாலியப் போர்க்கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. பிரிட்டிஷ் கடற்படைக்குச் சேதமெதுவு மில்லை.

## தொழில்வரி நிர்ணயம்

### ரூபாய் 50க்கு மேல் கூடாது

தொழில் வரியாக ஒருவர் வருஷத்தில் 50 ரூபாய்க்கு அதிகமாகச் செலுத்தாமலிருக்கத் தக்க ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென ஸர் எப். இ. ஜேம்ஸ் இந்திய அஸெம்பிளியில் ஒரு மசோதா கொண்டு வந்தார். சென்னையில் தொழில் வரியாக வருஷம் 1000ரூபாய் கூடச் சிலர் கட்டுவதாக ஸர் ஜேம்ஸ் கூறினர். முடிவில் மசோதாவைக் கெஸட்டில் பிரசுரிப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

அரசியல் தன்மை வாய்ந்த தீர்மானங்களை நிறைவேற்றியதற்காகக் கரூர் நகர சபையை ஒரு வருடகாலத்துக்குக் கலைத்து, கமிஷனர் ஸ்ரீ கோவிந்த மேனனை ஸ்பெஷல் ஆபீசராக சென்னை சர்க்கார் நியமித்திருக்கின்றனர்.






## ஸ்ரீ உபயதுல்லா வேண்டுகோள்

### நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றுங்கள்

தேசியவாரக் கொண்டாட்டம் சம்பந்தமாக தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஜனாப் வி. எம் உபயதுல்லா வெளியிட்டிருக்கும் அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

சமீபத்தில் இது குறித்து மகாத்மா விடுத்த வேண்டுகோளைக் கவனித்திருப்பீர்கள். 1930ம் வருஷம் ஏப்ரல் மாதம் 6-ந் தேதி மகாத்மா உப்பு சத்தியாக்ரகத்தைத் துவக்கினார். அத்தினத்தின் ஞாபகார்த்தமாக இவ்வருஷம் 6ந் தேதியன்று உபவாசம் பிரார்த்தனை இவற்றை மேற்கொண்டு தேசியவாரம் ஆரம்பமாகிறது இக்கொண்டாட்டத்தின் இதர தினங்களை முக்கியமாகக் கதர், கிராமக் கைத்தொழில்கள் இவைபற்றிய பிரசாரத்துக்காகப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். எவ்வளவு தூரம் கதர் விற்கமுடியும், நூல் நூற்கமுடியும், மற்றவர்களும் அவற்றைக் கைக்கொள்ளச் செய்ய முடியும் என்பதை நாம் காந்திஜிக்குக் காட்ட வேண்டும். ஆகவே எல்லோரும் இவ்வாரத்தை நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக உபயோகப்படுத்திக் கொள்ளுமாறு வேண்டுகிறேன். இவ்வாரத்தில் அனைவரும் கதர் விற்பனை செய்வது, நூல் நூற்பது தீண்டாமை விலக்கி படிப்பின்மை போக்கி வகுப்பொற்றுமை ஏற்படச் செய்வது இவ் வேலைகளில் ஈடுபடுதலவசியம்.

காங்கிரஸ் சகோதர சகோதரிகளும் அனுதாபிகளும் அனுபவ சாத்தியமான முறையில் இவ்வாரம் வெற்றி பெறத் தங்களாலான அனைத்தையும் செய்வார்களென நம்புகிறேன்.

### இந்தட்டா செட்டியார்கள் சங்க ஆண்டு விழா

ஈந்தட்டா நகர தெண்டாயுதபாணி கோவில் மடத்தில் சென்ற மாசி மாதம் 29உ புதன்கிழமை மாலை நான்கு மணிக்கு திரு. ராம. ப. அழ. அழகப்ப செட்டியாரவர்கள் தலைமையில் ஈந்தட்டா நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் சங்கத்தின் முதலாண்டு நிறைவு விழாவும் வருடக் கூட்டமும் நடந்தன. புது வருடத்திற்கு திரு. மு. மு. கா. ப. பழநியப்ப செட்டியாரவர்கள் தலைவராகவும், திரு. சி. ராம. சா. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள் உபதலைவராகவும், திரு. ஆத. சுப. ஆத. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள் காரியதரிசியாகவும், திரு. ப. வி. வீர. பழ. பெரியகருப்பஞ் செட்டியாரவர்கள் உப காரியதரிசியாகவும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார்கள். மற்றும் சங்க காரியங்களும் கவனிக்கப்பெற்றன. சிற்றுண்டி விருந்தும் சந்தன புஷ்ப தாம்பூலாதிகளும் வழங்கப்பெற்றன.

## நோட்டீஸ்

இதனால் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால்:—

என் ஸ்வீகார குமாரன் வெள்ளையன் என்ற பழனியப்பன் எனக்கு திருப்திகரமாக நடவாமல் அவனிஷ்டம்போல் இருந்துவந்ததால் அவனுக்கும் எனக்கும் சம்பந்தமில்லை என்று ஏற்படுத்திக்கொண்டோம். என் சொத்துக்களுக்கும் அவனுக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது. அவனுடன் யார் எவ்விதமான கொடுக்கல் வாங்கல் செய்துகொண்டிருந்தாலும் இனி செய்து கொண்டாலும் என்னையும் ஷை சொத்துக்களையும் கட்டுப்படுத்த மாட்டாது.

கண்டனூர் 2—4—41. } சித. பள. ராம. ராமசாமி செட்டியார்.



காரைக்குடி நகர சபை

## முனிசிப்பல் தோட்டிகளுக்கு க்ஷேம நிதித் திட்டம்

### ரெஸிடன்ஷியல் பள்ளிக்கூடம் கைத்தொழில் பள்ளிக்கூடமாக மாறுகிறது

(நமது நிருபர்)

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டமொன்று சென்ற சனிக்கிழமை மாலை 5-15 மணிக்கு "காந்தி மாளிகை"யில் சேர்மன் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் நடைபெற்றது. தலைவருடன் 11 அங்கத்தினர்கள் வந்திருந்தனர்.

மூன்று முனிசிபல் கூட்டங்களுக்குத் தொடர்ச்சியாக வராத காரணத்தால் தமது அங்கத்தினர் பதவியை இழந்துவிட்ட திரு. சா. கணேசன் அவர்களை ரெஸ்டோர் செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது. கவுன்சிலர் திரு. வி. கிருஷ்ணய்யரால் கேட்கப்பட்ட கேள்விகட்குப் பதிலளிக்கப்பட்டது. முனிசிபல் கேஸ்களில் வக்கீல்களாக நியமிக்கப்பட்டிருப்பவர்களிடம் செலவுகளுக்காகவும், பீசுகளுக்காகவும் அட்வான்ஸாகக் கொடுக்கப்பட்ட தொகைகள், அவர்களிடம் பாக்கியாக நிற்கும் முனிசிபல் பணம், யார் யாரிடத்தில் எவ்வளவு நிற்கும், ஏன் இதுவரைக் கணக்கு முடித்து வசூலிக்கவில்லை யென்பன பற்றியே எல்லாக் கேள்விகளுமிருந்தன.

தேவகோட்டை ஹரிஜன சேவை சங்கத்துக்கு நன்கொடை கோரிவந்திருந்த கடிதம் படிக்கப்பட்டு, இங்கு ஹரிஜன வேலைக்கு நகரசபை அதிகம் செலவிடுவதால், வெளியிடங்களுக்கு நன்கொடை கொடுப்பதற்கில்லையென்று தீர்மானிக்கப்பட்டது. ஹிந்துஸ்தான் சாரணர் சங்கப் பராமரிப்புக்கு 25 ரூபாயும், இராம கிருஷ்ண வித்தியாலயம் பராமரிப்புக்காக ரூ.50ம் நன்கொடையளிக்க முடிவுசெய்யப்பட்டது.

1940–41ம் வருஷத்துக்கு டி. கே. வி. சாமி ஆயுர்வேத வைத்தியசாலைக்கு 400 ரூ. நன்கொடை யனுமதித்துக் கவுன்சில் 9-3-40ல் ஓர் தீர்மானம் நிறைவேற்றியது. நன்கொடை கொடுப்பதை நிறுத்திவிடும்படி 2-5-40ல் சர்க்கார் உத்தாவிட்டபடி நிறுத்தப்பட்டது. ஹரிஜன் காலனியில் டிஸ்பன்ஸரி ஒன்று வைத்து குறிப்பிட்ட நேரத்தில் நிறைப்படி மருந்தும், சிகிச்சையும் அளிக்கவேண்டும் என்ற நிபந்தனையுடன் ஆயுர்வேத வைத்தியர் ஸ்ரீ டி. கே. வி. சாமிக்கு வருஷம் 400 ரூ. மான்யம் அளிக்கலாமென்று தீர்மானிக்கப்பட்டது.

கீழசத்திரம் வீதியில் குழாய்கள் சப்ளை செய்த வகையில் அ. கா. அம்பலம் அன் சன்ஸார் நகரசபைமீது தொடர்ந்துள்ள வழக்கின் விவரம் தெரிவிக்கப்பட்டது. ஷை பைப்புகளுக்காக ரூ. 188-8-0 கொடுக்க அனுமதி கோரப்பட்டது. இந்தச் செலவு கவுன்சிலுக்கு சம்பந்தப்பட்ட தல்லவாதலால், நிராகரிக்கப்பட்டது.

பழய சந்தைப்பேட்டை காம்பவுண்டில் வண்டிப்பேட்டையாக உபயோகப்படுத்த ஸ்ரீ கொப்புடையம்மன் கோவில் டிரஸ்டி திரு. அண்ணாமலைச் செட்டியார் லைசன்ஸ் கோரியிருந்தார். கவுன்சிலின் முன்னைய தீர்மானப்படி ஹெல்த் ஆபீசர் குறிப்பிட்டுள்ள சீர்திருத்தங்களைச் செய்துமுடிக்காததால் லைசன்ஸ் மனு நிராகரிக்கப்பட்டது.

ஒன்பது ஜலதாரை வண்டிகள் சப்ளை செய்யப் பல கம்பெனிகளிலிருந்து கொட்டேஷன்கள் வந்திருந்தன. மொத்தம் 6 கொட்டேஷன்கள். மிக உயர்ந்த விகிதம் (வெளியூரிலிருந்து) ரூ 234—4—10; மிகக் குறைந்த விகிதம் (உள்ளூரிலிருந்து) ரூ 215. இதுபற்றிச் சிறிது விவாதம் நடைபெற்றது. உள்ளூரிலிருந்து வந்த கொட்டேஷன் மிகக் குறைவாக இருப்பதாலும், நேராகப் பார்த்துச் செய்யலாமாதலாலும் அந்தக் கம்பெனிக்கே ஆர்டர் கொடுப்பதென்று சிலர் அபிப்பிராயப்பட்டார்கள். எனினும் முடிவில் டெண்டர் கேட்பதென்று முடிவு செய்யப்பட்டது.

நகர சபை 10-2-41ல் எடுத்த தண்ணீரைப் பரிசீலனைசெய்து கிண்டி கிங் இன்ஸ்டிடியூட் டைரக்டர், தண்ணீர் நன்றாக இருப்பதாக அனுப்பியுள்ள அறிக்கை ரிக்கார்டு செய்யப்பட்டது.

முனிசிபல் ரெஸிடன்ஷியில் பள்ளிக்கூடத்தைக் கைத்தொழில் பள்ளிக்கூடமாக மாற்ற அனுமதித்து செருப்புத் தைத்தல், தச்சுவேலை, கொல்லுவேலை ஆகியன கற்றுக்கொடுப்பதென்று தீர்மானிக்கப்பட்டது.

பெண் ஆடுகளை அறுக்க கசாப்புக் கடைக்காரர்கள் அனுமதி கோரியிருந்தனர். அவ்வாறு செய்வது குல அபிவிருத்திக்குத் தடையாகுமாதலால் அனுமதி மறுக்கப்பட்டது.

முனிசிபல் தோட்டிகளுக்கு ஒரு க்ஷேம நிதித் திட்டம் ஏற்படுத்துவது சம்பந்தமாய் பரிசீலனைசெய்து ஒரு திட்டம் தயாரிக்க தலைவர், ஸ்ரீ ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார், சி. முரு. நாராயணன் செட்டியார் ஆகியோரடங்கிய கமிட்டி நியமிக்கப்பட்டது.

இன்னும் பல மாமூலான விஷயங்கள் கவனிக்கப்பட்டு, பல பில்லுகள் சாங்ஷன் செய்யப்பட்டுக் கூட்டம் 7–25க்கு முடிந்தது.

### இந்தியாவில் மோட்டார் செய்ய

#### 2½ கோடி மூலதனத்துடன் கம்பெனி ஸ்தாபிதம்

தற்போதுள்ள ஏற்பாடுகளின்படி இந்தியாவில் செய்யப்பட்ட மோட்டார் கார்கள் இவ்வருஷ முடிவுக்குள் விற்பனைக்கு வந்துவிடவேண்டும். 2½ கோடி ரூபாய் மூலதனத்துடன் மைசூரில் ஒரு கம்பெனி ஏப்ரலில் பதிவு செய்யப்படுமென்று தெரிகிறது. மைசூர் சர்க்கார் வசதிகள் அளிக்க ஒப்புக்கொண்டிருக்கின்றனராம். தொழிற்சாலை மைசூர் சமஸ்தானத்தில் ஸ்தாபிக்கப்படும். பல நினுசுக் கார்களும் செய்யப்படும் என்று தெரிகிறது.

### மதிப்புரை

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

அவசியம் என்கிறார். ஒரே தொழிலையே பலரும் செய்யக்கூடாதென்று திரு. கரு. சண அரு. அண்ணப்ப செட்டியார் அபிப்பிராயப்படுகிறார். உள்நாட்டுப் பொருள்கள் உற்பத்தியில் முனைந்து ஈடுபடும்படி தேவகோட்டை திரு. வி இராமநாதன் வேண்டுகிறார். இத்தகைய பல சிறந்த கட்டுரைகளுடன் இப்பிரசுரம் மிளிருகின்றது. இது ஒரு இலவசப் பிரசுரம்.

### ஸ்ரீராம நவமி ரதோத்ஸவம்

ஸ்ரீ கோதண்டராமசுவாமியின் ஸ்ரீராம நவமி ரதோத்ஸவம் 1941, ஏப்ரல் 6உ ஞாயிற்றுக்கிழமை மாலை 6-மணிக்கு நடைபெறுமென்று அயோத்தியிலிருக்கும் ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர ஏஜண்டு அறிவிக்கிறார்.





# நோட்டீஸ்

தேவகோட்டை
டி. மு. கோர்ட்டு

O. S. No. 7 of 1941.

சிலம்பனி ஸ்ரீ சிதம்பர விநய கர் தேவஸ்தானம் ஷை டிரஸ்டி வீர. லெ. லெ. சிதம்பரம் செட்டியார் 1.
அள. அரு. அருணாசலம் செட்டியார் 2.
} வாதிகள்

தேவகோட்டை ரெகுநாதபுரம் தெருவி லிருக்கும் கார்மேகம் சேர்வை மகன் வைரவன் சேர்வை } பிரதி வாதிகள்

வாதிகள் பிரதிவாதி வீடு கட்டியிருக்கிற இடத்துக்கு வழக்கப்படி தேவஸ்தானத்துக்கு மேல்வார பாத்தியத்துக்காகச் சேரவேண்டிய தொகை ரூபாய் 236-0-0 ஐ வரப்பற்ற பிராது செய்து பிரதிவாதி ஆஜராக வாயிதா 14-4-1941 ல் ஏற்பட்டிருக்கிற விவரம் தெரிவித்திருக்கிறது.

G. வெங்கடசுப்பிரமணியன்,
வாதி வக்கீல்.

28—3—41.

## சிறை செல்வதில் தனிப் பெருமை இல்லை

### காங்கிரஸ் காரியதரிசிக்கு மகாத்மா பதில்

வங்க மாகாண சத்யாக்ரக இயக்கத்தைப்பற்றியும், காங்கிரஸ் வேலைகளைப் பற்றியும் மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி, மகாத்மா காந்திக்கு எழுதியிருந்த கடிதத்துக்கு, மகாத்மா அனுப்பியுள்ள பதிலில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

"சிறை செல்வதில் பிரத்தியேகப் பெருமையோ அல்லது தனி யோக்யதையோ எதுவுமில்லை. லட்சியத்தைச் சாதித்துக்கொள்ள அதுவும் ஒரு வழி; அவ்வளவுதான். சிறைக்குப் போகாமலே நமது லட்சியம் கைகூடுமாயின், அத்தகைய சந்தர்ப்பத்தை நாம் வரவேற்கவேண்டும்.

"பல கஷ்டங்களைப்பற்றி நீங்கள் தெரிவித்திருக்கிறீர்கள். இவையெல்லாம் எனக்குத் தெரிந்தவையே. ஆனால் என்ன செய்யலாம்? கஷ்டங்களைக் கடந்துதான் நாம் வெற்றியைக் காணவேண்டியிருக்கிறது. எனினும் அவற்றைக் கண்டு நாம் கலங்கக்கூடாது. நாம் உறுதியாக இருந்தால் வெற்றி நிச்சயம். சத்யாக்ரகிகளை சர்க்கார் கைது செய்யாததுபற்றி நாம் கவலைப்படவில்லை. சர்க்காரின் இந்தப் புதிய போக்கை நாம் அனுகூலப்படுத்திக் கொள்ளவேண்டும். சத்யாக்ரகிகள் டில்லிக்குப் போகாவிடில் தங்கள் ஜில்லாவிலேயே தங்கிப் பொதுமக்களை ஒன்று திரட்டட்டுமே.

"சிறைக்குச் செல்வது போலவே, வெளி வேலையும் மிக முக்கியமானது தான். எல்லோரும் சிறை செல்ல முடியுமா? பெரும்பாலோர் வெளியில் தானிருப்பர். இவர்களைத் தக்க வகையில் நிர்மாணித்தால் நாம் சிறை புக வேண்டிய அவசியமேயிராது."

## தமிழ் நாட்டில் சர்க்கா சங்கங்கள்

### நிறுவுவதுபற்றி ஸ்ரீ ராமநாதன் அறிக்கை

அகில பாரத சர்க்கா சங்கத்தின் (தமிழ் நாடு) காரியதரிசி ஸ்ரீ எஸ் ராமநாதன் தமிழ் நாட்டில் சர்க்கா சங்கங்கள் நிறுவுவதுபற்றி வெளியிட்டுள்ள அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:-

15 வயதுக்கு மேற்பட்டவர்கள் அங்கத்தினர்களாகலாம். ஒரு சங்கத்தில் குறைந்த பட்சம் 5 அங்கத்தினராவ திருக்க வேண்டும். அங்கத்தினர்கள் தினசரி அரைமணி நேரமாவது நூற்க வேண்டும். மாதச் சந்தா 840 கஜ நூல். சங்கத்திற்கு நூற்கும் கருவிகளும், பஞ்சும் குறைந்த விலைக்கு சப்ளை செய்யப்படும். 30 அங்கத்தினர்களுக்குக் குறையாமலுள்ள சங்கங்கள் ஒவ்வொன்றும், ஒருவரைத் தேர்ந்தெடுத்து, நூற்றல் சம்பந்தமான விஷயங்களில் பயிற்சிபெற திருப்பூர் பயிற்சிப் பாடசாலைக்கு அனுப்பலாம். அவர் பரீட்சையில் தேறினால் தகுதிப் பத்திரம் வழங்கப்படும். அவர் மற்ற அங்கத்தினர்களுக்குப் போதனை செய்வார். அங்கத்தினர்கள் நூற்ற நூலை, அ. பா. ச. சங்கத்தில் ஆடையாக மாற்றிக் கொள்ளலாம்.

### சிங்கப்பூரில் பிரிட்டிஷ் இந்தியப் படைகள்

பிரிட்டிஷ் ராணுவத்தையும், விமானப் படையையும் சேர்ந்த பல பிரிவுகள் முதன் முதலாக மார்ச் 30உ சிங்கப்பூர் போய்ச் சேர்ந்திருக்கின்றன. இவற்றில் பெரும்பாலானவை பிரபல இந்தியப் படைகளாகும். சிங்கப்பூர் கவர்னர் ஸர் ஷென்டன் தாமஸ் படைகளை வரவேற்று ரேடியோவில் பேசினர். அப்படைகளில் பல பஞ்சாபியரும், முஸ்லிம்களும், ராஜ புத்திரர்களும், சமஸ்தானங்களைச் சேர்ந்தவர்களும் இருக்கிறார்கள்.



குளிர்ச்சியாகத் தயாரித்த ருசிமிகுந்த
"ஓவல்டினை"
சாப்பிட்டுப் பாருங்கள்

கோடை நாட்களில் குளிர்ச்சியான ஓவல்டின் ஒரு கிளாஸ் சாப்பிட்டால் ருசியாயிருப்பதுடன், உடம்புக்கு போஷணையையும் தந்து, பலத்தை விர்த்தி செய்கிறது. அதை வெகு சுலபமாகத் தயாரிக்கலாம். ஒரு கிளாஸ் பச்சைப் பாலில் இரண்டு டீஸ்பூன் "ஓவல்டின்" எடுத்துப் போட்டு, தேவையானால் சர்க்கரையும் சேர்த்து, சாப்பிட்டால், சூடான 'ஓவல்டின்'னைப் போலவே, ருசிகரமாகவும், இனிமையாகவும் இருக்கும்; போஷணையும் வீர்யமும் அளிக்கும்.
எல்லா கெமிஸ்டுகளாலும் ஸ்டோர்ஸ்களிலும் விற்கப்படும்.




ஓவல்டின்
OVALTINE
பலவிருத்தி ஆகார பானம்

டிஸ்டிரிபூட்டர்:— கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட்.
(செயிண்ட் ஹவுஸ்) 310,311, லிங்கசெட்டி தெரு, மதராஸ்,
பம்பாய், கராச்சி, கல்கத்தா, ரங்கூன்

ஓவல்டின் பிஸ்கட்டுகள்:— சிலவற்றை சாப்பிட்டுப் பாருங்கள், அவை ருசிகரமானவை, ஜீரணிப்பவை, போஷாக் குள்ளவை. நீங்கள் வாங்கத்தகுந்த சேர்த்தியான பிஸ்கட்டுகள் அவைதான். 4 அவுன்ஸ், 8 அவுன்ஸ் பொட்டலங்களாகவும் ஒரு பவுண்டு டின்னுகளிலும் விற்கப்படும்.

OV/18/40

## ஓர் அரிய பிரசுரம்

# கதைக் கோவை

40—பிரபல எழுத்தாளர் எழுதிய
40 சிறந்த
தமிழ்ச் சிறு கதைகள்

504-பக்கங்கள்
கிளேஸ் ரூ. 3—0—0
பெதர்வெயிட் ரூ. 3—8—0
உயர்தர பைண்ட் கட்டடம்.
எங்கள் புத்தக ஜாப்தா, எழுதுவோர்க்கு இனமாய் அனுப்பப்படும்.

அல்லயன்ஸ் கம்பெனி,
மயிலாப்பூர், சென்னை.

### தம்பதிகளின் கொலையும் தற்கொலையும்

ஒரு குடும்பத்தின் பரிதாப முடிவு

சேலத்தில் ஒரு வைசியக் குடும்பம் முழுமையும் மார்ச் 28உ பரிதாபகரமான முறையில் அழிந்து விட்டது. தங்களது 5 வயதுப் பெண்ணையும் 2 வயதுப் பையனையும் கிணற்றில் தள்ளிக் கொன்றுவிட்டு, முத்துசாமிச் செட்டியும் அவரது மனைவியும் தூக்கிட்டுத் தற்கொலை புரிந்து கொண்டனர். குடும்ப வருத்தத்தின் காரணமாகவே இம்மாதிரி செய்யப்பட்டதாம்.

உங்கள் அறிவைத் துணைக் கொண்டு உங்கள் கைகளால் வேலை செய்யுங்கள். இது மட்டும் போதாது. நீங்கள் உங்கள் முழு மனதோடும் உழைக்க வேண்டும். அப்போது தான் வெற்றி காண முடியும்.
"திபியன்"

# இப்பொழுதே இன்ஷூர் செய்வது புத்திசாலித்தனமான தல்லவா?

எதிர்காலத்தில் என்ன வரப்போகிறதென்று தெரியாமலிருக்கையில் ஒவ்வொருவரும் தகுந்த முயற்சி யெடுத்துக்கொண்டு தவறாது செய்ய வேண்டியது என்னவெனில் தங்கள் தங்கள் கைவசமுள்ளதை மீதிப்படுத்திச் சேர்த்து வைத்துக் கொள்வதேயாகும்.

நீங்கள் ஏற்கனவே உங்கள் ஆயுளை இன்ஷூர் செய்திருந்தால் அதை விடாது கட்டி வரவும், காலாவதி யாகும்படி விட்டுவிடாதீர்கள். அப்படி இன்ஷூர் செய்யவில்லை யென்றால் இப்பொழுதே இன்ஷூர் செய்துகொள்ளுங்கள். ஒரு ஆயுள் பாலிஸி ஒப்பற்ற பாதுகாப்பு ஆகும். எவ்வளவு சீக்கிரமாக அதைச் செய்து முடிக்கிறீர்களோ அவ்வளவுக்கவ்வளவு லாபகரமுமாகவிருக்கும். "முன்னெச்சரிக்கையே முன்பாதுகாப்பு" என்ற பழமொழி முற்றிலும் உண்மையானது.

முழு விபரங்கட்கும் யோசனைகளுக்கும் எங்களுக்கு எழுதுங்கள்.

## நாஷனல் இன்ஷூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.

(ஸ்தாபனம் 1906)
ஹெட் ஆபீஸ்: கல்கத்தா.

பிராஞ்சு ஆபீஸ்:
நாஷனல் இன்ஷூரன்ஸ் பில்டிங்ஸ்,
302, சைனாபஜார் ரோட், மதராஸ்.

சப் பிராஞ்சு ஆபீஸ்: 7, புதுத் தெரு, மதுரை.
சப் பிராஞ்சு ஆபீஸ்: 5 கெம்பெகௌட ரோட், பெங்களூர்.

### பஞ்சாபில் மதுவிலக்கு

கிராமங்களில் லாரி நிற்கும் இடங்களுக்கருகில் உள்ள பொது ரஸ்தாக்களில் கள்ளுக்கடைக ளிருக்கக் கூடாதென்றும், ஆகவே அவ்விடங்களிலுள்ள கடைகளை எடுத்து விடும்படி பஞ்சாப் சர்க்கார் உத்தரவிட்டிருக்கிறார்கள். இதனால் ரஸ்தா விபத்துகள் குறையுமென்று சர்க்கார் கருதுகின்றனர். பல ஜில்லாக்களிலும் இந்த உத்தரவு அமுலுக்கு வந்திருக்கிறது.



## சென்னை மாகாண ஜனத் தொகை

சென்னை மாகாணத்தின் இன்றைய ஜனத் தொகை 4 கோடியே 93 லட்சமாகும். இதில் ஆண், பெண் இருபாலாரது எண்ணிக்கையும் சரிசமமா யிருக்கிறது. சென்ற பத்து வருஷத்தில் இம்மாகாணத்தின் ஜனத் தொகை நூற்றுக்கு 11·6 வீதம் அதிகமாயிருக்கிற தென்று ஏற்படுகிறது. சென்ற ஜனசங்கியைக் கணக்குப்படி விசாகபட்டினம் ஜில்லா முதல் ஸ்தானம் வகித்தது. இப்போதோ முதல் ஸ்தானம் மலையாளத்துக்குக் கிடைத்துவிட்டது. விசாகபட்டினத்தின் ஜனத்தொகை 3,800,000; மலையாளத்தின் ஜனத் தொகையோ 3,900,000. சென்னையையும் நீலகிரியையும் விட்டுவிட்டால் சென்னை மாகாணத்தில் எந்த ஜில்லாவிலுமே ஜனத்தொகை பத்து லட்சத்துக்குக் குறைவாயில்லை. பதினொரு ஜில்லாக்களில் ஒவ்வொன்றிலும் 20 லட்சத்துக்கு மேற்பட்டவர்களிருக்கிறார்கள். சேலத்திலேயே மிகவும் அதிகமான உயர்வு ஏற்பட்டிருக்கிறது. அதாவது நூற்றுக்கு 17·9 வீதம் உயர்ந்திருக்கிறது. கிருஷ்ணா ஜில்லாவில் நூற்றுக்கு 15·3 வீதமும் கோயம்புத்தூரில் நூற்றுக்கு 14·9 வீதமும் ஜனத் தொகை அதிகமாயிருக்கிறது. சென்னை நகரத்தின் ஜனத் தொகை நூற்றுக்கு 20 வீதம் அதிகமாயிருக்கிறது. அதாவது 777,000 ஆக இருக்கிறது. நீலகிரி ஜில்லாவில் ஏற்பட்டுள்ள உயர்வு நூற்றுக்கு 24 வீத மிருக்கிறது.

### மலாய் நாடுகளின் ஜனத்தொகை

மலேயா இங்கிலாந்தைவிடக் கொஞ்சம் பெரிது. இதன் விஸ்தீரணம் 53,220 சதுர மைல்கள். 1938ல் இதிலிருந்த ஜனங்களின் தொகை 52,78,870. இதில் ஐக்கிய மலாய் நாடுகளின் விஸ்தீரணம் 27,540 சதுர மைல்கள்—அதாவது மலேயாவின் மொத்த விஸ்தீரணத்தில் பாதிக்கும் கொஞ்சம் அதிகம். ஐ. ம. நாடுகளில் 1938ல் வசித்த ஜனங்களின் தொகை 21,03,729. (மலாய்க்காரர்கள் 6,87,495; ஐரோப்பியர்கள் 8,624; யூரேஷியர்கள் 4 970; சீனர்கள் 9,21,701; இந்தியர்கள் 4,63,874; இதரர்கள் 17,065.)

### பாலைவனத்தில் 2000 மைல் ரயில் பாதை

விஷி ஸர்க்கார் திட்டம்

விஷி காலனி மந்திரியான அட்மிரல் பிளேடன் வட ஆப்ரிக்காவுக்குப் பிரயாணமாவார் என்று சமீபத்தில் அறிவிக்கப்பட்டது. ஸஹாரா பாலைவனத்தின் குறுக்கே 2000 மைல் தூரம் ரயில்பாதை போடுவதைப் பற்றி நேரில் பார்வையிடுவதற்காகவே அங்கு செல்கிறார். போக்குவரத்து மந்திரியும் அவருடன் கூடச்செல்கிறார். வட ஆப்ரிக்காவையும் டகாரையும் சேர்க்கவே இப்பாதை போடப்படுகிறது. வட பகுதியில் ஏற்கனவே தொழிலாளர் முகாம்கள் அமைக்கப்பட்டு விட்டன.

## இனம்! வருடப் பலன் இனம்!!

எதிர்கால கேள்வி 5-க்கு ரூ 1—8—0 விடையுடன் 1941-ஹு க்கு தாங்கள் நினைக்கும் ஒவ்வொரு காரியமும் சித்தி பெறும். சந்திரனின் நாட்களும் மணிக்கு மணி பலாபலன் அட்டவணையுடன், ஆரோக்கியம் குடும்பம் தொழில் ஆதாயம் வீர்யம் காதல், கடன் அதிர்ஷ்டம் மாதம் நாள் நேரம் நெம்பர் திக்கு



புஷ்பம் லாட்டரி ரேஸ் இன்னும் பலாபலன் எழுதிய மாதம் முதல் ஓர் வருடப் பலன் இனம். ஜாதகம் அல்லது எழுதும் நேரம் தேவை. ஸ்ரீ ஷண்முகக் கடவுள் அருளால் எழுதும் உண்மைப் பலனால் பல கலக்கத்தில் நியமகாது மீட்கப்பட்டவராவீர். ஜாதகம் கணிக்க ரூ 2. ஓர் திசைக்கு புத்தி பலன் ரூ 3.

புரொபஸர் N.V. சுப்பிரமணியம்,
J. M. & J. A. 6 ஜோதிஷ ஆசிரமம்,
வாலாஜாபாத், P.O. S.I.R. சென்னை.

# நற்செய்தி

சிறிய தொகை சேமிப்போர்க்கு



## இப்பொழுது நீங்கள் 2½ சதவிகித வட்டி

(சாதாரண போஸ்டாபீஸ் ஸேவிங்ஸ் பாங்கு வட்டியைவிட ஒரு சத விகிதம் கூட) பெற

ஆரம்பியுங்கள் ஒரு

# போஸ்டாபீஸ் டிபென்ஸ் ஸேவிங்ஸ் பாங்கு அக்கௌண்டு!

உங்களால் மிக்ககூடிய ஒவ்வொரு ரூபாயையும் இந்த வழியில் சேருங்கள். உங்களால் மிக்ககூடிய பணத்திற்கு யுத்தகாலம் பூராவும், அதற்குப் பிறகு ஒரு வருஷத்திற்கும், சர்க்கார், வருமான வரியின்றி, வருஷமொன்றுக்கு 2½ சத விகிதம் வட்டி கொடுப்பார்கள். உங்கள் தேசத்திற்கு உதவி செய்வதுமட்டுமின்றி நீங்கள் அதிக தொந்தரவின்றி சம பாதுகாப்புடன் அதிக வட்டி அடைகிறீர்கள்.

- சௌகரியம்:- சேமிப்பை இவ்வழியில் டெபாசிட் செய்வதில் போஸ்டாபீஸ் சாதாரண ஸேவிங்ஸ் பாங்கில் போடுவதிலுள்ளதைவிட அதிக தொந்தரவு எதுவுமில்லை.
- லாபம்:- வருமான வரியின்றி வருஷத்திற்கு 2½ சத விகிதம், அதாவது போஸ்டாபீஸ் சாதாரண ஸேவிங்ஸ் பாங்கு வட்டியைவிட ஒரு சத விகிதம் அதிகம்.
- டெபாசிட்கள்:—குறைந்தது ரூ. 2/- லிருந்து ஒவ்வொரு ரூபாயாக ரூ. 10,000 வரைக்கும் டெபாசிட் செய்யலாம். யுத்தம் முடிந்த ஒரு வருஷம் கழித்தோ அல்லது இறக்கும் காலத்திலோ திருப்பிக் கொடுக்கப்படும்.



இந்நற்செய்தியை மற்றவர்களுக்கும் தெரிவியுங்கள்!

இன்றே தங்களருகாமையிலுள்ள போஸ்டாபீசில் மற்ற விபரங்களைக் கேளுங்கள்.

G.I.T.-41.

### கிராம விளையாட்டுச் சங்கம் குமாரவேலூர்

மேற்படி சங்கக் காரியதரிசியும், ஜுனியர் கோஷ்டி காப்டனும், ஸ்போர்ட்ஸ் அபிமானியும், சிரத்தையுள்ளவரும், கால் பந்து விளையாட்டில் சேம்பியனுமான ஸ்ரீ சேவு. சோமசுந்தரம் மலாய்நாடு செல்வதை முன்னிட்டு 24-3-41ல் எஸ். சொக்கநாதபுரத்தில் எல்லா விளையாட்டாளர்களும் மாணவர்களும் ஆவரங்குடி ராமனாதன் தலைமையில் கூடினர். அன்னவரின் பெரு முயற்சியினால் மேற்படி சங்கம் ஸ்தாபிக்கப்பெற்று இளைஞர்களுக்கு இடமும் சக்தியும் உற்சாகமும் பெறுவதற்கு விடாது எடுத்துக்கொண்ட உழைப்பைப் பற்றி நா. கதிரேசன், ஆதி. ஷண்முகம், சுப. லெட்சுமணன், லெ. சொக்கலிங்கம் ஆகியவர்கள் அன்னவரைப் பாராட்டி பிரிவு உபசாரமொழி கூறினார்கள். சோமசுந்தரம் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்து வந்தனம் கூறியதும் அன்னாருக்கு கதர் மாலை அணிவித்து சுகமாக மலாய்நாடு சென்று க்ஷேமத்தோடு திரும்பிவர எல்லோரும் பிரார்த்திக்க தலைவர் முடிப்புரையுடன் வந்தன வாழ்த்துக் கூறப்பெற்று, கூட்டம் இனிது நிறைவெய்தியதென உதவிக் காரியதரிசி அறிவிக்கிறார்.

### கிராம காங்கிரஸ் சபை நாச்சியாபுரம்

26-3-41 மாலை 4-மணிக்கு திரு. செ. பழ. மாணிக்கம் செட்டியார் தலைமையில் நிர்வாகக் கூட்டம் நடைபெற்றது. காரியதரிசி திரு. கண. வயி. நாகப்பா அயல்நாடு செல்லுவதை முன்னிட்டு, 3-1-41ல் அனுப்பிய ராஜிநாமா லெட்டரை அங்கீகரித்து பதிலாக திரு. செ. பழ. மாணிக்கம் செட்டியாரைக் காரியதரிசியாக ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டது. பலர் சொற்பொழிவாற்றினார்கள்.

### ஆவினிப்பட்டி

இவ்வூர் விவேகானந்தர் கல்விக்கழகத்தின் மாதக் கூட்டம் 20-3-41ல் கழக உதவியாசிரியர் ஸ்ரீ A. M V. சுப்பிரமணிய ஐயர் தலைமையில் நிகழ்ந்தது. சீதை, சொர்ணவல்லி, வள்ளி, K. R. சுப்பையா என்ற மாணவ மாணவிகள் முறையே, "நன்றி கெட்ட புலி," 'புத்தகம்' 'பட்டினத்து சுவாமிகள்' 'அழகுக் கலைகள்' என்ற விஷயங்களைப்பற்றிப் பேசினார்கள்.

திருப்தியுடைய பன்றியைப் போல் வாழ்வதை விட திருப்தி யில்லாத ஒரு போதிஞனாக வாழ்வதே மேல்.
—சர். எஸ். ராதாகிருஷ்ணன்

## "படிக்கக்கூடாது"

ஸ்திரீகள் சம்பந்தமான புஸ்தகங்களைவாசிப்பதென்பதே கூடாது என்பது பொது ஜனங்கள் அபிப்பிராயம். அதனால் இளைஞர்கள் அறியாமைத்தனத்தினாலேயே வாழ்க்கையில் கஷ்டங்களுக்குள்ளாகின்றனர். எங்கள்

**காமசாஸ்திரம்**

என்னும் புஸ்தகத்தை வாசித்து உங்கள் வாழ்க்கையில் நலமடையுங்கள். புஸ்தகம் இனாம்! தபால் செலவில்லை!!

ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம்,
26, பிராட்வே, மதராஸ்.

### ஸ்ரீ சரஸ்வதி சங்கம், புதுவயல்

நிகழும் பங்குனித் திங்கள் 12ம் நாள் (25-3-41) செவ்வாய்க்கிழமை மாலை 5-மணிக்கு இச்சங்கத்தின் மாதக் கூட்டம் VR. ராமநாதன் M. Sc. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. ச. வி. மாணவ, மாணவிகளின் பாட்டுப் பேச்சுக்குப்பின் விஞ்ஞானத்தைப் பற்றி M. லக்ஷ்மிநாராயண ஐயர் B.A., L.T.. அவர்களும் K. S. முத்துச்சாமி ஐயர் அவர்களும் சொற்பெருக்காற்றினர். தலைவரவர்களின் முடிப்புரையில் ரேடியோவும், ஆகாயத் தந்தியும் என்னும் பொருள்பற்றி சுமார் 1½ மணி நேரம் பேசினர்.

## ஹரிஜனங்களுக்கு உதவி

### காந்திஜி பெயரால் ஸ்காலர்ஷிப்

அகில இந்திய ஹரிஜன சேவக சங்க நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் மார்ச் 24உ புது டில்லியில் கூடியது. சபர்மதி ஹரிஜன ஆசிரமத்தில் 60 ஹரிஜனப் பெண்களுக்கு விடுதி ஒன்று அமைக்க முடிவு செய்யப்பட்டது. கட்டிடத்துக்கு ரூபா 40,000-ம், மாதச் செலவுக்கு 2000 ரூபாயும் அனுமதிக்கப்பட்டன. மகாத்மா மூலம் ஹரிஜனங்களுக்குக் கிணறுகள் வெட்ட 11,000 ரூ. நன்கொடை வந்திருக்கிறது. காலேஜுகளில் படிக்கும் ஹரிஜனப் பிள்ளைகளுக்கு காந்திஜி பெயரால் ஸ்காலர்ஷிப் கொடுக்க 10,500 ரூ. ஒதுக்கப்பட்டது.

---

### 'ஹரிஜன்' இப்போது வெளிவராது

மகாத்மா காந்தியின் 'ஹரிஜன்' முதலிய பத்திரிகைகள் மார்ச் கடைசியில் வெளிவருமென்று அறிவிக்கப்பட்டது. பின் ஏப்ரல் முதல் வாரக் கடைசியில் வெளிவருமென்று தெரிவிக்கப்பட்டது. சமீபத்தில் ஸ்ரீ மகாதேவ தேசாய் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் 'ஹரிஜன்' முதலிய பத்திரிகைகள் இன்னும் சில காலம் வெளிவர முடியாதென்றும், இதன் காரணத்தைப் பகிரங்கப்படுத்த முடியாதென்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

---

### பஞ்சாப்பில் எழுத்தறிவு இயக்கம்

### 50,000 பேர் பலன் பெற்றனர்

பஞ்சாப் மாகாணத்தில் வியாபித்திருக்கும் எழுத்தறிவின்மையைப் போக்குவதற்காக, சர்க்கார் ஆரம்பித்த இயக்கத்தின் பலனாக ஒரு வருஷத்தில் 50,000 பேர்களுக்கு மேல் எழுத்தறிவு பெற்றிருக்கின்றனர். படிப்பதற்காக மொத்தம் 106,473 பேர் சேர்ந்தனர். ஸ்திரீகளுக்கும் எழுத்தறிவு ஊட்டப்பட்டு வருகிறது. ஜில்லா தோறும் ஸ்திரீகளுக்கு எழுத்தறிவு ஊட்டும் சங்கங்கள் ஏற்பட்டு வருகின்றன.

---

### சென்னை செனட் சபையில் தீர்மானம்

வயது வந்தவர்களுக்குக் கல்வி கற்பிப்பதற்காக சில காலேஜ்களுடையவும், மாணவர்களுடையவும் உதவி கொண்டு ஒரு திட்டத்தைத் தயாரிக்கும்படி சின்டிகேட்டைக் கேட்டுக்கொள்வதாக பீகம் மீர் அமிருதீன் சென்னை யூனிவர்ஸிட்டி செனட் சபையில் கொண்டு வந்த தீர்மானம் நிறைவேறியிருக்கிறது.

---

### திருப்பத்தூர் தாலூகாவில் விலை வாசிகள் நிர்ணயம்

26-3-41ல் திருப்பத்தூர் தாலூகா விலை நிர்ணயக் கமிட்டி நிர்ணயித்த விலைகளின் ஜாப்தா:

| | | | |
|---|---|---|---|
| அரிசி முதல் தரம் நெல்லூர் சம்பா | ரூ 1க்கு | $3\frac{1}{4}$ | படி |
| ஷை மல்லிகைச் சம்பா | ,, | $3\frac{1}{2}$ | ,, |
| புழுங்கல் அரிசி முதல் தரம் | ,, | $4\frac{1}{2}$ | ,, |
| ஷை 2-வது தரம் (பெருவட்டு கார் அரிசி) | ,, | $5\frac{1}{2}$ | ,, |
| நெல் முதல் தரம் | ,, | 12 | ,, |
| ஷை 2-ம் தரம் | ,, | 13 | ,, |
| ரெங்கூன் கால் குருணை | ,, | 5 | ,, |
| கேப்பை | ,, | 10 | ,, |
| பருப்பு முதல் தரம் | ,, | 4 | ,, |
| உளுந்தம் பருப்பு | ,, | $3\frac{1}{4}$ | ,, |
| பாசிப் பருப்பு | ,, | $4\frac{1}{2}$ | ,, |
| கடலைப் பருப்பு | ,, | $4\frac{1}{8}$ | ,, |
| கடலை | ,, | $4\frac{1}{2}$ | ,, |
| கொள்ளு | ,, | 7 | ,, |
| உப்பு | ,, | 9 | ,, |
| மல்லி | ,, | 7 | ,, |
| பழுப்பு சீனி | வீசை 1க்கு | 0-8-0 | |
| சர்க்கரை (கருப்பு) | ,, | 0-3-0 | |
| அஷ்டகிராம் சீனி | ,, | 0-6-9 | |
| மிளகாய் வத்தல் சம்பா | ,, | 0-9-0 | |
| ஷை குண்டு | ,, | 0-8-3 | |
| தீப்பெட்டி | 1க்கு 4 பைசா, 5 பைசா. | | |
| திருப்பூர் 4 முழம் வேஷ்டி | ,, | 0-8-0 | |
| ஈரோடு 4 முழம் வேஷ்டி | ,, | 0-7-0 | |
| ம.எண்ணெய் 1-ம் தரம் பாட்டில் | | 0-3-0 | |



## நோட்டீஸ்

இதனடியில் கையொப்பம் வைக்கின்ற நான் என் குமாரனும் நாட்டரசன்கோட்டை லேட். குப. அ. நா. கண. (KP. A. N. KN.) கண்ணப்ப செட்டியாரின் குமாரனும் நாட்டரசன்கோட்டையிலிருந்து தற்காலம் பக்கோ ஜில்லா (Pegu Dt.) பென்விக்கோனிலிருக்கும் (Penwegon) குப. அ. நா. கண. (KP. A. N. KN.) சுப்பிரமணியன் செட்டியாருக்கு 20—8—1932ல் எனக்காகவும் என்னுடைய மற்றொரு மகனான மாணிக்கம் செட்டியாருக்கு கார்டியனாகவும் கண்டு பக்கோ ஜில்லா பென்விக்கோனிலிருக்கும் குப. அ. நா. கண. கடை பிரிவினை சம்பந்தமாக கொடுக்கப்பட்ட ஜெனரல் பவர் ஆப் அட்டார்னி என்ற அதிகார பத்திரத்தை இன்று முதல் ரத்துச் செய்திருக்கிறேன். மேலே கண்ட ஜெனரல் பவர் ஆப் அட்டார்னி என்னும் அதிகாரப் பத்திரத்தின் ஷரத்துகளுக்கு விரோதமாகவும் அதிகமாகவும் ஷை சுப்பிரமணியன் செட்டியார் காரியங்கள் செய்து வந்திருக்கிறதாகத் தெரிவதில் அவைகள் என்னையாவது என்னுடைய மற்றொரு மகனான மாணிக்கம் செட்டியாரையாவது குப. அ. நா. கண. (KP. A. N. KN.) கண்ணப்ப செட்டியாரின் எஸ்டேட்டையாவது கட்டுப்படுத்தாது. ஷை சுப்பிரமணியன் செட்டியார் ரசீதுகள், பத்திரங்கள் முதலியவைகள் எழுதிக் கொடுத்திருந்தாலும், அவைகள் என்னையாவது என்னுடைய மற்றொரு மகனான மாணிக்கம் செட்டியாரையாவது ஷை குப. அ. நா. கண. (KP. A. N. KN.) கண்ணப்ப செட்டியாரின் எஸ்டேட்டையாவது கட்டுப்படுத்தாது என்ற விபரத்தை இந்த நோட்டீஸ் மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

தனக்காகவும் ஷையார் மகன் மாணிக்கம் செட்டியாருக்கு கார்டியனுமான

உமையாள் ஆச்சி,
நாட்டரசன்கோட்டை,
குப. அ. நா. கண. கண்ணப்ப
செட்டியார் பாரி,
29—3—41.

---

### குமார ராஜா—வைஸ்ராய் பேட்டி

செட்டிநாடு குமார ராஜா ஸ்ரீ மு. அ. முத்தையா செட்டியார் மார்ச் 26உ புது டில்லியில் வைஸ்ராயைப் பேட்டி கண்டு பேசினார்.

---

### கையால் செய்யப்படும் காகிதம்

வங்க சர்க்கார், கையினால் காகிதம் செய்து பார்க்க மூன்று வருஷத் திட்டமொன்று போட்டிருக்கின்றனர். முன் காலத்தில் அம்மாகாணத்தில் இத்தொழில் மிகவும் பிராபல்யமாக நடந்து வந்தது. புதிய திட்டத்திற்கு 9,000 ரூ. செலவழிக்க உத்தேசித்துள்ளனர்.

---

### கொலையுண்ட எம். எல். ஏ. யின் குடும்பத்துக்கு உதவி

1939, நவம்பரில் ரோஹரி என்ற இடத்தில் சுட்டுக்கொல்லப்பட்ட சிந்து அஸம்பிளி காங்கிரஸ் மெம்பர் ஸ்ரீ எச். எஸ். பம்னானியின் மகனுடைய கல்விக்காக, மாதா மாதம் 50 ரூ. உதவி செய்ய மாகாண சர்க்கார் அனுமதித்திருக்கின்றனர்.

Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi, (S. INDIA)

